# கல்கி

KALKI
7.12.97
ரூ. 4.00



கொதிப்புடன்
பேசுகிறார்
கபில்தேவ்!

இட்லி, சாம்பாருக்கு
இத்தாலிய
எதிரி!

சந்தோஷம்

# மாமனிதருக்கு மணிவிழா

**7.12.1997 மணிவிழா காணும் மனமொத்த தம்பதியர்**

ஸ்ரீ கந்தகோட்டம் சீனியர் அறங்காவலர் திருப்பணிச்செம்மல்

## DR. P. பாலசுப்பிரமணியம் & திருமதி விசாலாட்சி



**வையத்துள் வாழ்வாங்கு வாழ்க!**

## ஸ்ரீ கந்தசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

(மத்திய அரசு அங்கீகரித்த நிதி கம்பெனி)

**H.O**.60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை-2, போன் **8548917/8527573**

**B.O**.36, ஜீன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை
சென்னை-15, போன் **459569/4332950**

**B.O**.42, சிந்தூர் ஷாப்பிங் சென்டர், II அவென்யூ
(ஐயப்பன் கோவில் அடுத்து) அண்ணாநகர் சென்னை 600 040

Dr. R. **விவேகாநந்தன்** B.Com,M.B.A
A. **சுப்பிரமணியன்**
V. **சண்முகவடிவு**, B.A
V. **விஜயகோபால்** B.Com,D.C.P.
M. **ராஜேந்திரன்**
P. **ஏகாம்பரம்**




• இந்து முன்னணியின் சுவர் வாசகங்கள்...



• அல் உமா பேனர்

- டிசம்பர் - 6 : இந்துக்களின் வெற்றித்திருநாள். மீண்டது அயோத்தி... விரைவில்: காசி, மதுரா...! - இந்து முன்னணி.
- டிசம்பர் - 6 : உச்சநீதி மன்றத் தீர்ப்பை அவமதித்த நாள். நமக்குத் துக்க நாள்... கறுப்பு தினம். இஸ்லாமியர்களே அன்று உங்கள் உடைகள், கடைகள், வீடுகளிலும் கறுப்பாக இருக்கட்டும். — அல் உமா....

# வம்புக்கு வழிவகுக்கும் வாசகங்கள்!



• சாந்தலிங்க சுவாமிகள்...

**கோ**வையில் திரும்பின பக்கமெல்லாம் நகர மையத்தில் இப்படிப்பட்ட சுவரொட்டிகளும், விளம்பரங்களும்தான். போதாக்குறைக்கு தலைநகர் நோக்கி மாபெரும் பேரணிக்கு ஒவ்வோர் அணியின் அறை கூவலான அழைப்பு வேறு! இது எத்தகைய பின் விளைவுகளை ஏற்படுத்தும்? மத நல்லிணக்க அமைதிக்

# எம்.பி.சீட் வேணுமா? எடு பதினைந்து லட்சம்!

## காதில் விழுந்தவை

பத்திரிகைத் தொழிலையும் வெற்றிகரமாக நடத்த வேண்டும் என்ற ஆசை. விளைவு: ஜனவரி மாதம் முதல், இதயம் பலமாகப் பேச இருக்கிறது!

● ஜெயின் கமிஷன் அறிக்கை விவகாரத்தில் த.மா.கா தலைவர்கள் மௌன சாமிகளாக இருக்க, புரசைவாக்கம் த.மா.கா எம்.எல்.ஏ ரங்கநாதன் மட்டும் கலைஞர் கலந்து கொண்ட கூட்டுறவு விழாவில், 'ஜெயின் கமிஷன் அறிக்கையைக் குப்பையில் போடுங்கள்' என்று பேசியது குறித்து த.மா.கா வட்டாரத்தில் இருவிதமான கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. 1. அடிதடி, கட்டைப் பஞ்சாயத்து விவகாரங்களில் ரங்கநாதனுக்கு மாநில அரசின் லோக்கல் போலீஸ் தயவு தேவை. அதன் காரணமாகத்தான் இந்த ஜால்ரா. 2. அமைச்சர் ப. சிதம்பரத்தின் நெருக்கமான சிஷ்யர் அவர். 'த.மா.கா - தி.மு.க. கூட்டு உடையக் கூடாது' என்பது சிதம்பரத்தின் விருப்பமாம். ஆதலால் தமது தி.மு.க. ஆதரவு நிலையை ரங்கநாதன் மூலம் வெளிப்படுத்தி இருக்கிறார் என்றும் சொல்கிறார்கள்.

● தி.நகரில் துணி, நகை, பாத்திர வியாபாரத்தில் சக்கைப் போடு போடும் 'சக்ஸஸ்' நிறுவனம் அது. உரிமையாளருக்கு

● ஒரு வழியாக ஃபெப்ஸியை முதல் ரவுண்டில் வீழ்த்தி வெற்றிகரமாக வலம் வரும் தமிழ் திரைப்பட படைப்பாளிகள் சங்கத்தினர் மத்தியில் இப்போது கிசுகிசுக்கப்படுவது என்ன தெரியுமா? பாராளுமன்றத்துக்கு இடைத்தேர்தல் வந்தால் என்ன நிலை எடுப்பது? கிட்டத்தட்ட 99 சதவீதம் பேர் கலைஞர் ஆதரவு நிலை என்றாலும், ஒட்டு மொத்தமாக ரஜினியையும் சேர்த்து வைத்து முடிவு எடுத்து விட்டால், மிச்சம் மீதி முணுமுணுப்புகள் இருக்காதே என்றும் கணக்குப் போடுகிறார்களாம்.

● ஜெயின் கமிஷன் அறிக்கை பற்றி வை.கோ எந்தக் கருத்தும் சொல்லாமல் இருப்பது, ம.தி.மு.க. பிரமுகர்கள் இடையே கசப்பைத் தோற்றுவித்திருக்கிறது. 'இது ஒரு முக்கியமான பிரச்னை. ஜெயின் கமிஷன் குறிப்பிடும் கால கட்டத்தில் எங்களவர், தி.மு.கவில் இருந்தது மட்டுமல்லாமல், புலிகளுடனும் மிகவும் நெருக்கமாக இருந்தார். யாரும் இது பற்றி மறுத்துக் கூற முடியாது. அ.தி.மு.கவுடன் கூட்டணியில் இருக்கிறோம் என்ற ஒரே காரணத்திற்காக

---

குழுவில் அங்கம் வகிப்பவரும், கோவை தமிழ்க் கல்லூரி தாளாளரும், பேரூர் ஆதீனமுமான தவத்திரு சாந்தலிங்க அடிகளாரிடம் கேட்டோம்.

"முன்னெப்போதையும் விட இது இவ்வளவு வீரியமாய்ப் புறப்பட்டிருக்கிறதென்றால் அதற்கு ஆட்சியாளர்களும், அவர்தம் ஆட்சிக் குளறுபடிகளும்தான் காரணம். வன்முறை உருவாகக் கூடிய சூழ்நிலை உருவாகிறதென்றால் சட்டம் என்ன செய்கிறது? இது வெறும் வாக்குச் சீட்டை எதிர்பார்த்துச் செய்கிற செயல்.

"மெக்கா, மெதினா நகரங்கள் இஸ்லாமியர்களுக்கு எவ்வளவு புனிதமானதோ அதே போல் அயோத்தியின் புனித மண்ணைத் தொட்டுக் கும்பிட ஒவ்வோர் இந்துவுக்கும் உரிமையுள்ளது. கறுப்பு தினம் கொண்டாட இது இந்தியாவா அல்லது வேறு நாடா என்றே சந்தேகமாயுள்ளது. மத நல்லிணக்கக் குழுவில் கூட கட்சி அடிப்படையிலேயே ஆட்கள் நிரப்பப்பட்டுள்ளனர். ஆன்மீகப் பற்றில்லாதவர்களால் (நம்பிக்கையேயில்லாதவர்கள்) எப்படி அமைதியை நிலைநாட்டட முடியும். எனவேதான் இப்போது அந்தக் குழு கூட்டத்திற்கு எங்கள் இளைய அடிகள் மட்டும் செல்கிறாரேயொழிய நான் செல்வதில்லை...!" என்றார்.

இஸ்லாம் மார்க்கத்தில் ஊறிப் போன ஒரு பெரியவரை இது விஷயமாய் அணுகிய போது அவர் அப்படியே ஒதுங்கிப் போனார். நாம் மிகவும் வற்புறுத்தியதின் பேரில் -

"வேண்டாம் சார்... சும்மாவே சில பத்திரிகைகள் நான்தான் இங்கு நடக்கும் வன்முறை நிகழ்ச்சிகளுக்கு திரைமறைவுக் காரணம் என்



கருத்துச் சொல்லாமல் இருப்பது ஒரு பலவீனமே. இப்போது கண்ணப்பன் - முத்துசாமி போன்றோர் மீண்டும் அ.தி.மு.க.வில் இணைந்துள்ளதால் அந்தக் கட்சியின் வலு கூடியிருக்கிறது. போகிற போக்கில், தேர்தல் நெருங்கும் நிலையில் ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி எங்களை ஜெ கழற்றி விட்டாலும் விடுவார்!" என்று நம் காதுபடவே புலம்பினார் சென்னை ம.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

● "பதினைந்து லட்சம் கொண்டு வந்தால் பாராளுமன்ற வேட்பாளர் ஆகலாம்" என்று அந்த தேசியக் கட்சியின் தமிழகத் தலைவர் சொல்லிக் கொண்டிருக்கிறாராம். "யாருடன் கூட்டணி என்று தெரியாமல் பணத்தை முதலீடு செய்வது சரியா?" என்று கேட்கிறார்கள் கட்சிக்காரர்கள். ◎

— தில்லப்பா

றெல்லாம் திரித்து எழுதி விட்டன. அதனால் என்னிடமிருந்து விடுபட்டுப் போன உயிருக் குயிரான இந்து சகோதரர்கள் ஏராளம். அதே போல் எதிர்த்து விலகிய சொந்தங்களும் அதிகம். நான் படித்தது ராமகிருஷ்ணா மிஷனில். இந்த நிலையில் நான் எதை உள்வாங்கி யிருப்பேன், உள்ளொளியாக எது இருக்கும்னு நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்... இது குறித் துப் பேச வேண்டாமே..." என்று நம் முகவா யைத் தொட்டு முத்தமிட்டு, கட்டாயமாய் விலகிப் போனார் அந்த அன்பு மனிதர்...

ஆனால் இது குறித்தெல்லாம் காவல் துறை கண்டு கொள்ளாமலே இருப்பது ஏன் என்பதுதான் நடுநிலையாளர்களுக்குப் புரியாத புதிராக இருக்கிறது. ◎

கட்டுரை, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

# எனக்கு எதிராகச் சதிவலை!

> "சோதனையிட்டால் ஃபைல் சிக்கியிருக்கும். நான் அசிங்கப்பட்டு, ஒரு திருடியாய் சித்திரிக்கப்பட்டிருப்பேன். கடவுள் கிருபையால் நான், முன் கூட்டியே ஃபைலை பார்த்து விட்டதால் தப்பித்தேன்."

ஹேமா ஜெயசீலன்-கடந்த வருடம் வரை கோவையில் ஒரு சாதாரண வழக்கறிஞர். இன்று கோவையில் இவரைத் தெரியாதவர்களே இருக்க முடியாது என்று கூறுகிற அளவுக்குப் பிரபலமான கார்ப்பரேஷன் கவுன்சிலர்.

அரசியலில் போதிய அனுபவம் இல்லாததால் நேர்மை, தூய்மை என்றிருக்கிறார் ஹேமா. அதுதான் அவருக்கு பிரச்னை! மேயரும் த.மா.கா. தான் என்றாலும் எந்தப் பிரச்னையிலும் முதல் கேள்வி ஹேமாவிடமிருந்தே எழுகிறது.

தினமும் மாலையில் மாநகராட்சி வாகனங்களில் டீசல் திருடப்படுவதை போலீஸ் எஸ். பி. உதவியோடு நேரடியாகச் சென்று பிடித்து நிறுத்தியவர் ஹேமா. துணை மேயர் வேலுச்சாமி, ஒரு பெண் கவுன்சிலருக்கு காதல் கடிதம் எழுதியதாகக் கிளம்பிய குற்றச்சாட்டை ஒட்டி, ஏழு பெண் கவுன்சிலர்களின் புகார்களோடு மூப்பனாரைச் சந்தித்து துணை மேயர் மீது நடவடிக்கை எடுக்கும்படி முறையிட்டதும் ஹேமாதான்.

பல லஞ்ச, ஊழல் குற்றச்சாட்டுகளை மாமன்றத்தில் முதல் ஆளாக எடுத்துரைத்து, பலருடைய வெறுப்புக்குள்ளாகியிருக்கிறார் ஹேமா. இதனால் சமீபத்தில் இவருக்கு எதிராக ஒரு சதி வலை பின்னப் பட்டது. அதென்ன சதி? இதோ ஹேமாவே விளக்குகிறார்.

"கோவை மாநகராட்சியில் ஏராளமான ஃபைல்கள் காணாமல் போயுள்ளதாக எனக்குத் தகவல் கிடைத்தது. இது குறித்து அடுத்த மாமன்றக் கூட்டத்தில் கேள்வி எழுப்பப் போவதாகப் பலரிடமும் கூறியிருந்தேன்.

"முற்பகல் பதினொரு மணிக்கு மாமன்றக் கூட்டம் என்பதால் எப்போதும் பத்து இருபதுக்குள் வீட்டை விட்டுப் புறப்பட்டு விடுவேன். அன்றைய தினம் என் அதிர்ஷ்டமோ என்னவோ பத்து முப்பத்தைந்துக்குத் தான் புறப்பட்டேன். வெளியே வரும் வேளையில் என் கணவர் 'ப்ளவுஸ் இப்படி கசங்கியிருக்கே.. வேற போட்டுக்கிட்டு வா' என்றார். உடனே மாடிக்குச் செல்லும் கதவைத் திறந்து கொண்டு மாடிப்படிக்கட்டில் ஏறிய போது தான் மாடிப்படியில் அந்த ஃபைலை

**— ஒரு பெண் கவுன்சிலரின் புகார்!**

கிருபையால் நான், முன் கூட்டியே ஃபைலை பார்த்து விட்டதால் தப்பித்தேன். என் பெயரை ரிப்பேராக்க யாரோ செய்த சதிதான் இது" என்கிறார் ஹேமா ஜெயசீலன்.

ஃபைலை அந்த மாமன்றக் கூட்டத்திலேயே மேயரிடம் ஒப்படைத்துள்ளார் ஹேமா. தற்போது அது குறித்து காவல் நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது. டிபார்மெண்ட் சார்பாக ஆணையர் ராஜேந்திரகுமார் விசாரணையில் இறங்கியதில் இதுவரை பதினெட்டு ஃபைல்கள் காணாமற்போனதாக கண்டுபிடிக்கப்பட்டு மூன்று மாநகராட்சி ஊழியர்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்.

பார்த்தேன். 86ம் வருடத்திய மாநகராட்சி ஃபைல் அது. யாரோ ஜன்னல் வழியே மாடிப்படியில் போட்டிருக்கிறார்கள். வழக்கமாக நான் பத்து இருபதுக்கெல்லாம் போய் விடுவேன் என்பதாலும், நான் புறப்படும் வரை வெளிக்கதவு சாத்தியிருந்ததாலும் நான் போய்விட்டேன் என்று நினைத்து ஜன்னல் வழியே மாடிப்படியில் யாரோ வீசியிருக்கிறார்கள்.

"நான் மாமன்றத்தில் ஃபைல்கள் தொலைவது குறித்துப் பேசினால், 'ஹேமாவே ஃபைல்களைத் திருடி வைத்துக் கொண்டு இங்கு வந்து குற்றம் சொல்கிறார்' என்று யாராவது கூறியிருப்பார்கள். 'வேண்டுமானால் என் வீட்டை சோதனை போட்டுக் கொள்ளுங்கள்' என்று நானும் ஆவேசமாய் முழங்கியிருப்பேன். சோதனையிட்டால் ஃபைல் சிக்கியிருக்கும். நான் அசிங்கப்பட்டு, ஒரு திருடியாய் சித்திரிக்கப்பட்டிருப்பேன். கடவுள்

மேயர் கோபாலகிருஷ்ணனிடம் பேசிய போது, "ஹேமா ஜெயசீலன் வீட்டில் ஃபைல் கிடந்ததா, போட்டது யார் என்பதெல்லாம் விசாரணையின் முடிவில் தான் தெரிய வரும். மற்றபடி ஹேமா ஜெயசீலன் கேள்வி கேட்பதோ, ஊழலை எக்ஸ்போஸ் பண்ணுவதோ மாநகராட்சியின் நலனுக்காகத்தானே! எனவே அதை நான் வரவேற்கவே செய்கிறேன். சில நேரம் அவர் தவறான குற்றச்சாட்டுகளை வைக்கும் போது மட்டுமே அவருக்கு எதிராக விளக்கம் கூறுகிறேன். இது ஆரோக்கியமான விஷயமே. மற்றபடி த.மா.கா.வைப் பொறுத்தளவில் கோஷ்டிப் பூசலோ, யாருக்கும் யார்மீதும் காழ்ப்புணர்ச்சியோ கிடையாது!" என்றார். ●

சந்திப்பு, படம் : **கிரண் நியூஸ்**

# ஜெயின் கமிஷன்; காங்கிரஸுக்கு கெயின் கமிஷன்!

• கேசரி

ஜெயின் கமிஷனின் இடைக்கால அறிக்கையின் முக்கியக் குறிப்புகள்: (1) விடுதலைப் புலிகளை தி.மு.க (கருணாநிதி) ஒடுக்கவில்லை; (2) இலங்கையிலிருந்து திரும்பிய அமைதிப்படையை கருணாநிதி வரவேற்கவில்லை (3) ராஜீவ்காந்திக்கு உரிய பாதுகாப்பு அளிக்க பிரதமர்கள் வி.பி. சிங்கும், சந்திரசேகரும் அக்கறை காட்டவில்லை (4) நரசிம்மராவ் முக்கிய ஆவணங்களை ஜெயின் கமிஷனுக்குத் தரவில்லை (5) விடுதலைப்புலிகள் போதை மருந்து உட்பட கடத்தலின்மூலம் பணம் திரட்டுகிறார்கள்.

அறிக்கை குறிப்பிடத் தவறியவை: (1) பயணத் திட்டத்தில் இல்லாத ஸ்ரீபெரும்புதூர் கூட்டத்திற்கு ராஜீவ் காந்தி சென்றதற்கு யார் காரணம்? ராஜீவ்காந்தி உயிருக்கு ஆபத்து இருக்கிறது என்று தெரிந்த பிறகும் (பாலஸ்தீன அதிபர் யாசர் அராபத் எச்சரித்திருக்கிறார்) திட்டமிடப்படாத கூட்டங்கள் எப்படி ஏற்பாடு செய்யப்பட்டன? கொலையாளிகள் தனுவும் சிவராசனும் எப்படி, யாரால் ராஜீவுக்கு அருகே செல்ல அனுமதிக்கப்பட்டார்கள்? தமிழ்நாட்டு/தேசிய காங்கிரஸ் தலைவர்களும் இந்த சதியில் உடந்தையா?

இது போன்ற இன்னும் பல கேள்விகளுக்கு இறுதி அறிக்கை விடை தரலாம். அப்படியானால் இப்போது அளிக்கப்பட்ட இடைக்கால (வேகாத) அறிக்கை தர வேண்டிய அவசர அவசியம் என்ன?

தனியார் தொலைக்காட்சிக்கு அண்மையில் அளித்த பேட்டியில் "இந்த இடைக்கால அறிக்கை அரசியலில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தும்" என்று ஜெயின் முன் கூட்டியே கூறியது ஏன்? அப்படி நிகழ வேண்டும் என்பது அவருடைய ஆசையா? இல்லையென்றால் யாருடைய ஆசை?

இனி ஜெயின் எதிர்பார்த்த அரசியல் மாற்றங்களைப் பார்ப்போம்.

தி.மு.கவை நீக்கு என்ற பூமராங்கை ஐக்கிய முன்னணி மீது காங்கிரஸ் ஏவியது. நோக்கம் தெளிவு: ஆட்சியைக் கவிழ்த்து, தேர்தலில் மீண்டும் ராஜீவ் படத்துடன், சோனியா காந்தி தலைமையில், மக்களிடம் சென்றால் அனுதாப வாக்குகளை அள்ளிக் குவிக்கலாம். அதே நேரத்தில், தனியாகத் தேர்தலை சந்திக்கவும் அச்சம். அதனால்தான் அறிக்கையில் கண்டனத்துக்குள்ளான சந்திரசேகர், ராவ், ப. சிதம்பரம் பற்றி காங்கிரஸ் வாயே திறக்கவில்லை. ஏனென்றால் சந்திரசேகர் பிரதமராக இருந்தபோது காங்கிரஸ்தான் ஆதரித்தது; ராவ் பல ஊழல் குற்றச்சாட்டுகளுக்குப் பிறகும் இன்னும் காங்கிரசில் கொஞ்சம் வலுவுடனேயே இருக்கிறார். ப. சிதம்பரம் என்ன இருந்தாலும் முன்னாள் காங்கிரஸ்காரரல்லவா? நாளை மீண்டும் காங்கிரசுக்குத் திரும்பி வர மாட்டாரா! ஆகவேதான் காங்கிரசுக்கு தி.மு.க வேண்டாத மருமகளாகவும், மற்றவர்கள் வேண்டியவர்களாகவும் ஆகிவிட்டார்கள். உண்மையில் ராஜீவ்காந்தி விஷயத்தில் காங்கிரசுக்கு அக்கறை இருக்குமானால், இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் காங்கிரஸ் ஆட்சியில் இருந்த போது, சோனியாகாந்தி அமேதியில் கணவரின் கொலையாளிகளை இன்னும் விட்டு வைத்திருக்கிறார்களே என்று பேசிய போதே - அன்று காங்கிரசிலிருந்த ப. சிதம்பரம் நாடாளுமன்றத்தில் நண்பர் ராஜீவுக்காகக் கண்ணீர் வடித்த போதே - ஜெயின் கமிஷனுக்கு முழு விவரங்களையும் தந்து உண்மைக் கொலையாளிகளை வெளிக் கொணர்ந்திருக்கலாமே!

ஏழு மாதங்களுக்கு முன்னால் தேவேகௌடாவை நீக்கினால்தான் ஆதரவு என்ற காங்கிரசின் நிபந்தனைக்கு ஐக்கிய முன்னணி பணிய வேண்டியிருந்தது. ஆனால் இன்று அது மறுக்கிறது. இன்று காங்கிரசுக்குப் பணிந்து தி.மு.கவை விலக்கினால், நாளை வேறு ஒரு காரணத்துக்காக மற்றொரு கட்சியை நீக்கச் சொல்லலாம். இப்படியே தொடருமானால் என்ன ஆவது? எனவே அடிக்கடி காங்கிரசின் மிரட்டலுக்கு அடிபணிவதை விட தேர்தலை எதிர்கொள்வது உத்தமம் என்று ஐக்கிய முன்னணி நினைத்ததோ என்னவோ, தி.மு.கவை நீக்கப் போவதில்லை

என்று தெளிவாக்கி விட்டது.

ஆனால் இந்த முடிவும் ஒருமனதானதல்ல. தேர்தலை எதிர்கொள்ள அஞ்சுவதில் முதல் ஆள் முலாயம் சிங் யாதவ். எனவே ஆட்சி கலைக்கப்பட்டால், மதவாத பி.ஜே.பிக்கு ஆதாயம் என்ற வாதத்தை முன் வைத்தார் அவர். இதே கருத்தை துவக்கத்தில் முன் வைத்தது மார்க்சிஸ்ட் கட்சி (தமிழக தேர்தலில் மார்க்சிஸ்ட் கட்சி தி.மு.கவின் எதிர் அணியில் இருந்தது



• சோனியா காந்தி

நினைவு கூரத் தக்கது). ஆனால் ஐக்கிய முன்னணியின் இதர கட்சிகள் - குறிப்பாக சி.பி.ஐ, தெலுங்கு தேசம் - தி.மு.கவை விலக்கக் கூடாது என்று கூறி விட்டன. இறுதியில் தி.மு.க விலகாது. தேவையானால் தேர்தலைச் சந்திப்போம் என்று ஐக்கிய முன்னணி அறிவித்து விட்டது.

தேர்தலைச் சந்திக்க அஞ்சும் மற்றொரு கட்சி த.மா.கா. சென்ற தேர்தலில் ஜெயலலிதா எதிர்ப்பு அலை + ரஜினி ஆதரவு ஆகிய காரணங்களால் எதிர்பாராத வெற்றி பெற்ற த.மா.கா இப்போது இருதலைக் கொள்ளி எறும்பு. கடந்த ஒன்றரை ஆண்டுகளில் த.மா.கா தன் இருப்பைத் தமிழகத்தில் வலுவூட்டவில்லை. ராஜீவ்காந்தி கொலை என்னும் அஸ்திரத்தை எடுத்துக் கொண்டு காங்கிரஸ் களத்தில் இறங்கினால் தி.மு.கவுடன் கூட்டணி சேர்வது த.மா.காவுக்குச் சங்கடம். ஜெயலலிதாவுடன் சேரவும் முடியாது. மூன்றாவது அணியான ம.தி.மு.க விடுதலைப்புலிகளுக்கு வெளிப்படையான ஆதரவு தரும் அணி. எனவே த.மா.காவுக்கு இரண்டே வழிகள்தான் உள்ளன. ஒன்று - தி.மு.கவை எதிர்க்கும் காங்கிரசில் சேர்வது. சோனியா காங்கிரஸ் தலைமையை ஏற்றுக் கொண்டால் இது சுலபம்! இரண்டாவது - எப்படியாவது தற்போதைக்கு ஐக்கிய முன்னணி ஆட்சியை நீடிக்கச் செய்வது. அதற்காக தி.மு.கவைப் பலி கொடுக்க நேர்ந்தாலும் சரி, காங்கிஸ் கூட்டணியில் சேர்ந்தாலும் சரி. மூப்பனாரின் மௌனம், இந்த இரண்டாவது வழியைத் தேர்ந்தெடுத்ததுபோலத் தெரிகிறது. சோனியா காந்தியின் மௌனம் கலைந்தால் மூப்பனாரின் மௌனமும் கலையும்.

**பா**ரதிய ஜனதா கட்சி குழம்பிய குட்டையில் மீன் பிடிக்கப் பார்க்கிறது. 'ஐக்கிய முன்னணி - காங்கிரஸ் இடையிலான முரண்பாடு சீக்கிரம் முடிவுக்கு வர வேண்டும் என்பதையே பாரதிய ஜனதா கட்சி விரும்புகிறது' என்று அதன் பொதுச் செயலர் வெங்கய்யா நாயுடு கூறினார் என்றாலும் உள்ளுக்குள், உத்திரப்பிரதேசம் போன்ற நிலை ஏற்படாதா என்ற ஆவல். அதனால்தான் 'ஜெயின் கமிஷன் ஒட்டு மொத்தமாகத் தமிழர்களை அவமதித்து விட்டது' என்று கோஷம் எழுப்பி தமிழர்களின் ஆதரவை - அதாவது தி.மு.கவை இழுக்க முயற்சி செய்கிறது. ஆனால் இதில் வெற்றி கிடைக்கும் என்று அதிக நம்பிக்கையுமில்லை. எனவே 'ஜெயின் கமிஷன் மட்டுமல்ல, தாக்கர் கமிஷன், போபார்ஸ் அறிக்கை உட்பட எல்லாவற்றையும் நாடாளுமன்றத்தில் விவாதிக்க வேண்டும்' என்று கூறி முழு அரசியல் ஆதாயம் பெற நினைக்கிறது.

ஜெயின் அறிக்கையை நாடாளுமன்றத்தில் வைக்க வேண்டும் என்று வலியுறுத்தி வந்த அதே காங்கிரஸ், நாடாளுமன்றத்தில் விவாதம் வரக் கூடாது என்று தவிக்கிறது. விவாதம் இடம் பெற்றால் புலிகளுக்கு இந்திராகாந்தி, ராஜீவ்காந்தி அரசுகள் அளித்த ஆதரவு பகிரங்கமாகும். எந்த நோக்கத்திற்காக காங்கிரஸ் திட்டமிட்டதோ அந்த நோக்கம் அடிபட்டுப் போகும்.

தில்லிக்கு வந்த பிறகு, ஐக்கிய முன்னணியின் நிலை உறுதியாக இருக்கிறதா என்று கணித்துக் கொண்டு, பத்திரிகையாளர்களைச் சந்திக்காமலேயே இருந்த கலைஞர் 'மக்களைச் சந்திப்போம்; அவர்கள் முடிவு செய்யட்டும்' என்று வியாழன் அன்று கூறிவிட்டுத் தமிழகம் திரும்பி விட்டார்.

ஆனால் அரசு நிலைக்குமோ இல்லையோ, நாடாளுமன்றத்தில் அறிக்கை மீதான விவாதம் தவிர்க்க முடியாதது. பி.ஜே.பி ஏற்கெனவே விவாதத்துக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளது.

இப்போது காங்கிரசிடமுள்ள ஒரே லட்சியம், எப்படியாவது நாடாளுமன்றத்தில் விவாதம் இடம் பெறாமல் தடுப்பதுதான். அதற்காக உ.பி. மாடலைக் கடைப்பிடித்தாலும் சரி. அல்லது தாற்காலிகமாகவாவது எப்பாடுபட்டாவது ஐக்கிய முன்னணியுடன் சமரசம் செய்வது. ◉

புதுதில்லியிலிருந்து: **புதியவன்**

படங்கள்: **சௌந்தர்ராஜன்**

தேர்வுக்குழு தடுமாற்றங்கள்:

# "கேப்டனாகியிருக்கக்கூடியவர் ராபின்சிங்...!"

**அண்மையில் பெங்களூருக்கு வந்திருந்த கபில்தேவைச் சந்தித்தோம். 'பேட்டியா? வேண்டாமே!' என்று ஆங்கிலப் பத்திரிகைகளுக்கெல்லாம் மறுத்தவர் நமக்கு மட்டும் சம்மதித்தார். 'கல்கி தமிழ்ப் பத்திரிகை என்ற ஒரே காரணத்துக்காகத்தான் சம்மதிக்கிறேன். ஏன் தெரியுமா? சென்னை, அதன் மக்கள், சிதம்பரம் ஸ்டேடியம்... எல்லாம் என்னைக் கவர்ந்த விஷயங்கள்! அதனால்தான்!' என்றவர் மனத்தில் பட்டதை ஒளிக்காமல், இயல்பாகப் பேசினார்...**

***கல்கி :*** *பொதுவாகவே வேகப் பந்து வீச்சாளர்களுக்கு கால் மூட்டுவலிதான் வரும். இதற்கு நேர்மாறாக ஸ்ரீநாத்தும் வெங்கடேச பிரசாத்தும் தோள் வலியால் தான் அவதிப் படுகின்றனர். நீங்களும் வேகப் பந்து வீச்சாளராக இருந்தவர் என்கிற முறையில் இதற்கான காரணத்தைச் சொல்ல முடியுமா?*

கபில்தேவ் : வேகப்பந்து வீச்சாளர்கள் பந்து வீசும் ஒவ்வொரு முறையும் இரு கால்களையும் பூமியில் நன்கு அழுத்தியாக வேண்டும். அதுவும் பவுன்சர் போடும் போது, பந்தை டெலிவரி செய்கிற அந்த நேரத்தில், உடம்பு பாரம் முழுவதையும் ஒரே காலில் கொண்டு வர வேண்டியிருக்கும். அதன் காரணமாகத்தான் மூட்டு வலி! இருந்தும் இவர்களுக்கு மூட்டுவலி வராமல் தோள் வலி ஏன் வந்தது என்றால், பரந்த தோள்கள் இல்லை என்பதால்தான். வேகப் பந்து வீச்சாளர்கள் என்றால் அகன்று விரிந்த தோள்கள் அவசியம் தேவை. உலகின் தலைசிறந்த வேகப்பந்து வீச்சாளர்களான ராபர்ட்ஸ், லில்லி, தாம்சன், ஹேட்லி டிங், மார்ஷல், இம்ரான்கான், ஏன் எனக்கும் கூட பரந்த தோள்கள் இருந்தன. இவர்களுக்கு அப்படியில்லை. 'நிறைய பயிற்சிகள் செய்து தோள்களை பலமுள்ளதாக ஆக்கிக் கொள்' என்று நான் ஸ்ரீநாத்திடம் சொல்லியும் இருக்கிறேன். ஆனால் கேட்கவில்லை. கூடவே அவர் சுத்த சைவமாக இருந்ததுகூட அவரது தோள் வலிக்குக் காரணமாக இருந்திருக்குமோ என்று சந்தேகப்படுகிறேன். நான் இப்படிச் சொல்வது வேகப் பந்து வீச்சாளர்களுக்கு மட்டுமில்லை. அனைவருமே பயிற்சிகள் செய்து தோள்களைப் பலப்படுத்திக் கொள்வது அவசியம். சில சமயங்களில் சுழற்பந்து வீச்சாளர்கள் கூட வேகப்பந்து வீச வேண்டியிருக்குமே!

***கல்கி :*** *நீங்கள் விளையாடிய காலகட்டத்தை விட, இப்போதைய ஆட்டக்காரர்கள் அதிக மேட்சுகள் விளையாட வேண்டியிருக்கிறது. நிறைய ஓவர்களும் போட வேண்டியிருக்கிறது. இது கூட இவர்களின் தோள் வலிக்குக் காரணமாக இருக்கலாம் என்றும் சொல்கிறார்களே?*

கபில்தேவ் : இதுவும் ஓர் உண்மைதான். கடந்த 96 - 97-ம் ஆண்டில் மட்டும் இவர்கள் 200 நாட்கள் இந்தியாவுக்காக விளையாடியிருக்கிறார்கள் - பந்து வீசியிருக்கிறார்கள். தவிர, ரஞ்சிக் கோப்பை போன்ற மேட்சுகளும் ஆடுகிறார்கள். இயந்திரங்களுக்குக் கிடைக்கிற ஓய்வு கூட இவர்களுக்கு இல்லாமல் போய் விட்டது. இதற்கு கிரிக்கெட் போர்டை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை. சச்சின் முதல் அசார் வரை எந்த வீரராவது இத்தனை மேட்சுகள் வேண்டாம் என்று சொல்லுகிறார்களா? சொல்ல மாட்டார்கள். காரணம் என்ன?

பணம்! நிறையப் பணம் வருகிறதே! கூடவே பயம். இவர்கள் ஆடாத நேரங்களில் இவர்களின் இடத்தை மற்றவர்கள் பிடித்து விட்டால் என்ன செய்வது என்கிற பயம். இவற்றின் காரணமாகவே, ஒரு மேட்சுக்கு உடம்பளவில் இவர்கள் தயாராக இல்லாத நிலையிலும் அதில் விளையாடுகிறார்கள். இதற்கு கிரிக்கெட் போர்டின் டாக்டரும் உடந்தை. அவருக்கும் பணம் தேவைப் படுகிறதே!



***கல்கி : இந்திய கிரிக்கெட்டின் தேர்வுக் குழுவில் நீங்கள், காவஸ்கர், ஸ்ரீகாந்த் போன்றவர்கள் ஏன் இடம் பெறக் கூடாது? அப்படி இடம்பெற்றால் நல்ல திறமையான ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுக்கிற வாய்ப்பு இன்னும் பிரகாசமாக இருக்குமே?***

**கபில்தேவ் :** கிரிக்கெட் டீமின் மானேஜருக்குக் கொடுப்பது போல எங்களுக்கும் பணம் தரவேண்டும் என்று கேட்டோம். அவர்கள் மறுக்கவே நாங்களும் இடம்பெற மாட்டோம் என்று சொல்லி விட்டோம்.

***கல்கி : தேர்வுக் குழு உறுப்பினராயிருப்பதற்கெல்லாமா சம்பளம் கேட்பது? அதுவொரு கௌரவ வேலைதானே!***

**கபில்தேவ் :** நான் ஹோட்டல் நடத்துவதோடு பலவித வியாபாரங்களும் செய்கிறேன். காவஸ்கரும் அப்படித்தான். ஆக, நாங்கள் கிரிக்கெட் விளையாட்டிலிருந்து தான் ஓய்வு பெற்றிருக்கிறோமே தவிர, பணம் சம்பாதிப்பதிலிருந்து அல்ல. இந்த நிலையில் எங்கள் வேலைகளையெல்லாம் விட்டு விட்டு வந்து நல்ல வீரர்களைத் தேர்வு செய்ய முடியாது. நல்ல வீரர்களைத் தேர்வு செய்வதோடு மட்டும் முடிகிற வேலையும் அல்ல அது. மேட்சுகள் நடக்கிற இடங்களுக்கெல்லாம் போய் அவர்கள் எப்படி ஆடுகிறார்கள் என்பதையும் கவனிக்க வேண்டும். இதனால் எங்கள் வியாபாரம் பாதிக்கப்படாதா? அந்த இழப்பை எப்படி ஈடுசெய்வது? நாங்கள் ஒன்றும் பரம்பரைப் பணக்காரர்களும் இல்லை. இப்போது ஆடுபவர்களைப் போன்ற சம்பாத்தியமும் எங்களுக்கு அப்போது இல்லை. இதனால்தான் சம்பளம் கேட்கிறோமே தவிர, பொறாமையால் கேட்கவில்லை.

மேலும் இப்படி நாங்கள் கேட்பது உலக அதிசயமும் இல்லை. இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளின் கிரிக்கெட் போர்டுகளெல்லாம் தேர்வுக் கமிட்டி உறுப்பினர்களுக்கு மாதச் சம்பளம் தருகின்றன. நம் போர்டும் கொடுத்தால் என்ன? பணமா இல்லை? கடந்த ஆண்டில் மட்டும் ஐந்நூறு கோடி ரூபாய்க்கு மேல் வருமானம் வந்துள்ள நிலையில் எங்களுக்குக் கொடுத்தால் என்ன? வருமானம் இல்லாமல் யாரும் இந்தக் காலத்தில் எந்த வேலையும் செய்ய மாட்டார்கள். உங்கள்



"நான் கேப்டனாக இருந்த காலத்திலிருந்தே இதைக் கண்டித்துக் கொண்டுதான் இருக்கிறேன். நான் கேப்டனாக இருந்தபோது என்ன சொல்லியும் கேளாமல் ராபின் சிங் ஓரங்கட்டப்பட்டார். காரணம் என்ன தெரியுமா? தமிழகத்தைச் சேர்ந்த பிரபாகர் ராவுக்கும் கர்நாடகக்காரரான ஜி.ஆர். விஸ்வநாத்துக்கும் இடையில் ஏற்பட்ட தகராறுதான்! ராபின் சிங்குக்கு அப்போதே வாய்ப்புக் கொடுக்கப் பட்டிருந்தால் அவர் கேப்டனாகக் கூட வந்திருப்பார்."

பத்திரிகையில் உங்களுக்குப் பணம் தராவிட்டால் நீங்கள் என்னை வந்து பேட்டி காண்பீர்களா என்ன? பணம் அவசியமான தேவை. இல்லாவிட்டால் இப்போது தேர்வுக் குழுவில் இருப்பவர்களைப் போன்ற ரிடையர்டு ஆசாமிகள்தான் கிடைப்பார்கள். நாங்களும் இன்னும் இருபது ஆண்டுகள் கழித்து அதாவது வியாபாரங்களிலிருந்தும் ரிடையர் ஆன பிறகு பணமில்லாமல் வரத் தயார்!

***கல்கி : சம்பளமில்லாமல் வேலை செய்வதால் தேர்வுக் குழு உறுப்பினர்களில் சிலர் பணம் வாங்கிக் கொண்டு வீரர்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்று சொல்கிறீர்களா என்ன...?***

கபில்தேவ் : இது பற்றி நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை. ஆனால் நான் சொல்கிறபடி சம்பளம் கொடுத்தால் இதுபோன்ற குற்றச்சாட்டுகள் வர வாய்ப்பே இருக்காது.

***கல்கி : சம்பளம் கொடுத்து விட்டால் மட்டும் போதுமா? தேர்வுக் குழு உறுப்பினர்கள் பிராந்திய உணர்வுடன்தான் செயல்படுகிறார்கள் என்றும் சொல்லப்படுகிறதே, இது சரியா?***

கபில்தேவ் : இப்படிச் செயல்படுபவர்களை நான் இப்போது மட்டும் கண்டிக்கவில்லை. நான் கேப்டனாக இருந்த காலத்திலிருந்தே இதைக் கண்டித்துக் கொண்டுதான் இருக்கிறேன். நான் கேப்டனாக இருந்தபோது என்ன சொல்லியும் கேளாமல் ராபின் சிங் ஓரங்கட்டப்பட்டார். காரணம் என்ன தெரியுமா? தமிழகத்தைச் சேர்ந்த பிரபாகர் ராவுக்கும் கர்நாடகக்காரரான ஜி.ஆர். விஸ்வநாத்துக்கும் இடையில் ஏற்பட்ட தகராறுதான்! ராபின் சிங்குக்கு அப்போதே வாய்ப்புக் கொடுக்கப்பட்டிருந்தால் அவர் கேப்டனாகக் கூட வந்திருப்பார். எப்படியோ, என்னைப் போன்ற ஆல் ரவுண்டரான அவர், இப்போதாவது விளையாட வந்திருக்கிறாரே என்று சந்தோஷப்படுகிறேன்.

***கல்கி : மானேஜர் பதவிக்குச் சம்பளம் உண்டே! அதற்கு அழைத்தால் வருவீர்களா?***

கபில்தேவ் : வேண்டவே வேண்டாம். இலங்கையில், மதன்லால் நமது கிரிக்கெட் வீரர்களைப் பற்றி அடித்த கமெண்ட்டும் அதற்கு அவரது மானேஜர் பதவியையே விலையாகக் கொடுக்க வேண்டியிருந்ததையும் பார்க்கிற யார்தான் மானேஜராக வர ஆசைப்படுவார்கள்?

***கல்கி : உலக சாதனை செய்த உங்களுக்கும் நிறைவேறாத ஆசை இருக்கிறதா?***

கபில்தேவ் : உண்டு. 434 விக்கெட்டுகளை எடுத்து உலக சாதனை செய்திருந்தாலும் இன்னும் ஒரேயொரு விக்கெட் எடுக்காமல் போய் விட்டோமே என்கிற வருத்தம். அதுவும் பாகிஸ்தான் வீரரின் விக்கெட். 99 பாகிஸ்தான் வீரர்களின் விக்கெட்டுகளை எடுத்த நான் இன்னும் ஒரு பாக். வீரரின் விக்கெட்டை எடுத்திருந்தால், ஒரு நாட்டின் அணிக்கு எதிராக நூறு விக்கெட்டுகள் எடுத்த சாதனையையும் செய்திருப்பேன். அது நிறைவேறாமல் போய்விட்டதே!

பேட்டி : **நந்தினி**
படம் : **சாரி**

# சந்தோஷம்

# ஸ்ரீ கந்தசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

சென்னை மாநகர சொத்துக்கள் மீதும் நகைகள் மீதும் கடன் வழங்கப்படும்!



கந்தகோட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி

5.12.97 அன்று அண்ணாநகரில் புதிய கிளை

**மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம்**

**Regd & H.O: 60,** *சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை,*

*சென்னை - 600 002, ☎:8548917, 8527573*

**B.O:** *36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 15 ☎: 459569,4332950*

**அண்ணா நகர் கிளை முகவரி:**

**B.O: 42. சிந்தூர்ஷாப்பிங் சென்டர்,**

**II அவென்யூ,**

**(ஐயப்பன் கோவில் அடுத்து)அண்ணாநகர்,**

**சென்னை – 600 040.**



சேர்மன்

**Dr. P. பாலசுப்பிரமணியம்**

சீனியர் டிரஸ்ட்டி கந்தகோட்டம்,

சென்னை - 3.

நிர்வாக இயக்குநர் பார்க்டவுன்

பெனிபிட் பண்டு லிட்.



*உறுப்பினராகி பயன்பெறுவீர்!*

*விடுமுறை:* **H.O.** *வெள்ளி,* **B.O.** *செவ்வாய்.*

**இது ஓர் P.B.குரூப் நிறுவனம்**



• பிள்ளையார் கோவில் தெரு : சாலை நடுவே அபாயம்!

# சுகாதாரமா? கிலோ என்ன விலை?

'நடராஜர் ஆலயம், அண்ணா மலைப் பல்கலைக் கழகம் - இவை இரண்டு தானா சிதம்பரத்தின் அடையாளச் சின்னங்கள்? நேரில் வந்து பாருங்கள். எங்கள் விபரீத அடையாளங்களை!' என்று கார்டு கார்டாக, இன்லண்ட் இன்லண்டாக எழுதிக் குவித்து விட்டார்கள் சிதம்பரம் தொகுதி மக்கள்.

ஊருக்குள் இறங்கியதும் நம்மை வரவேற்ற 'வராக மூர்த்திகள்' ஒன்றல்ல; இரண்டல்ல! சாலைகளை ஆக்கிரமித்துள்ள பன்றிகளின் எண்ணிக்கை, சிதம்பரம் தொகுதி மக்களின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பகுதியாவது கட்டாயம் இருக்கும் என்று தோன்றியது.

வழிந்தோடும் சாக்கடைச் சாலைகளில் புரண்டு ஆடும் பன்றிகள் ஒருபுறம் என்றால் இலவச இணைப்பாக இன்னிசை பாடும் கொசுக்களின் நான்-ஸ்டாப் கச்சேரி மறுபுறம்.

'சுகாதாரமா? கிலோ என்ன விலை?' என்று கேட்கிறார்கள் சிதம்பரம் வாசிகள். வீட்டை விட்டு வெளியே வரவே மிக பயப்படுகிறார்கள்.

பயத்துக்கு, சாலைப் பன்றிகள் மட்டுமல்ல காரணம்; சாலையே ஒரு காரணம்!

சிதம்பரத்தில் உள்ள 130 சாலைகளுள் சுமார் எண்பது சாலைகள் 'துப்புரவாகச்' செப்பனிடப்பட்டு, தார் போடப்பட்டு விட்டன என்று முனிசிபல் கமிஷனரும், சேர்மனும் சத்தியம் செய்கிறார்கள். ஆனால், நான் முழுக்க நாம் ஆட்டோவில் பயணம் செய்ததில் ஒப்புக்கு ஒரு சாலை கூட சமதளமாக இல்லை! தார் வாசனை பார்த்து சில நூற்றாண்டுகள் ஆனதுபோல் அப்படியொரு 'ஹரப்பா' தனம்.

'குண்டும் குழியும்' என்கிற பதப் பிரயோகமெல்லாம் சிதம்பரத்துக்கு உதவாது. குன்றும் கிணறும் என்று சொல்ல வேண்டும். மிகக் குறுகலான சாலைகளில் அபாரமான மேடு பள்ளங்கள். தடைகளில்லாமல் சீறிப்பாயும் சாக்கடை. நெரிசல் போக்குவரத்துக்கு வழிவிட்டு, சாலை ஓரங்களில் ஒடுங்கி ஆடிய படி தவித்துச் செல்லும் பொது மக்கள்.

போதாக்குறைக்கு நகர் முழுக்க பாதாளச் சாக்கடை வசதி இருந்தும், மக்கள் பெருக்

கத்திற்கேற்ப, குழாய்களை அகலப்படுத்தி, அடைப்புகள் நீக்கி, சரியான நீரோட்டத்துக்கு வழி செய்யப்படாததால் ஆங்காங்கே பூமி

• பன்றிகள் ராஜ்ஜியம்

பிளந்து கழிவுநீர் ஆர்டீஷியன் ஊற்றுக்களாகப் பொங்கிப் பெருகுகின்றன.

நகர் மையத்தில் உள்ள திருவள்ளுவர் தெருதான் மோசங்களின் சிகரம்.

பள்ளிப் பிள்ளைகளுக்கான சத்துணவுக் கூடம் ஒன்று தனியாக இங்கே இருக்கிறது. எப்படி? சுமார் 10 அடி சுற்றளவுக்குச் சாக்கடை அகழி. சுற்றிலும் பன்றிகள், கொசுக்கள் ராஜாங்கமான இந்த இடத்தின் நடுவே அடுப்பு புகைந்து சாதம் வேகிறது! கூடத்தின் வாசலிலேயே சிறுநீர் கழித்துப் போகிற சிறுவர்கள். (வேறு வழி? வெளியே வர வேண்டுமென்றால் குறைந்தபட்சம் ஒரு மீட்புப் படைப் படகு வேண்டியிருக்கும்!)

# சிதம்பரம்

"இதுவெல்லாம் எப்போதும் இருக்கிற சன்னைகள். இது மழைக்காலமல்லவா? நீங்கள் பல்கலைக் கழகத்தை அடுத்துள்ள குடியிருப்புப் பகுதிக்குப் போய்ப் பாருங்கள்!" என்று நம்மை வழியனுப்பி வைத்தார் கீழ வீதியில் நாம் சந்தித்த சந்திரசேகரன்.

**வி.**எம். கோவிந்தசாமி நகர். இது அண்ணாமலை பல்கலைக் கழகத்தை அடுத்துள்ள ஒரு குட்டி நகர் - அல்ல - தீவு.

மழைக்காலங்களில் வீடுகளுக்குள் தண்ணீர் வருவது நடக்கிற விஷயம்தான். ஆனால் தண்ணீருக்குள்ளேயே வீடுகள் செல்கிற விசித்திரத்தை இங்கே பார்க்க முடிந்தது!

அருகில் ஓடும் கொள்ளிடக் கால்வாய் ஒன்றின் உபயத்தில் சமீபத்தில் பெய்த மழை இந்த காலனியைப் பதம் பார்த்ததில் மழை



• சுந்தரபாண்டியன்



• அழகிரி

நின்று மூன்று நாட்களாகியும் இடுப்பளவுத் தண்ணீர்.

யமுனையைக் கடந்த ஃபாதர் ஆஃப் லார்ட் கிருஷ்ணா போல சைக்கிள், செருப்பு, குடைகள், புத்தகங்கள் என்று உடைமைகள் எல்லாவற்றையும் தலைமேல் தூக்கிவைத்துக் கொண்டு, இப்பகுதி மக்கள் நீரில் நீந்திச் செல்கிற சோகம் யாரையும் வருத்தும்!

இதில் விசேஷம் என்னவென்றால், இக்காலனியில் குடியிருக்கிறவர்களுள், சுமார் 90% கல்லூரி மாணவர்கள். இங்கே அறைகளில் இரண்டு பேர், மூன்று பேர்களாகத் தங்கி, சமைத்துச் சாப்பிட்டு, சமர்த்தாக யூனிவர்ஸிட்டிக்குப் போய் வருகிறார்கள்.



• வடக்கு விருதாங்கன் : சாலையா? சன்னையா?

"கொஞ்சம் மழை பெய்தால் இந்த நகர் தீவாகி விடும். முடிகிற வரைக்கும் தாக்குப் பிடிப்போம். ரொம்ப மோசமாகிவிட்டால், தாற்காலிகமாக அறையை காலி செய்துவிட்டு, நகருக்குள் ஏதாவது லாட்ஜில் குடி போய் விடுவோம். ஒட்டுமொத்தமாகப் பையன்கள் படை எடுக்கும்போது, இதுதான் சாக்கு என்று லாட்ஜ் வாடகையைக் கணிசமாக உயர்த்தி விடுகிறார்கள். படிக்கிற பையன்களிடம் அத்தனை பணம் ஏது?" என்று அழாக் குறையாகக் கேட்டார் முரளி கிருஷ்ணன் என்கிற கெமிக்கல் இஞ்ஜினியரிங் மாணவர்.

"நகருக்கும் பல்கலைக் கழகத்துக்கும் நடுவே ஒரு ரயில்வே லைன் போகிறது. கேட் எப்போதும், மூடியே இருக்கும். இந்தப் பகுதியில் நிரந்தர டிராஃபிக் ஜாம்! ஒரு மேம்பாலம் வேண்டும் என்று வருஷக்கணக்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். யாராவது முயற்சி எடுத்தால்தானே?" என்று பலர் நமக்கு எழுதியிருந்தனர். இப்போது மட்டுமல்ல, '94-ல் சிதம்பரம் நகரச் சிறப்பிதழுக்காகக் கேட்டிருந்த போதே.

இதே போலத்தான், பெண்கள் கல்லூரி, தொலைக்காட்சி அஞ்சல் நிலையம், மூங்கிலடி ஆற்றுப் பாலம், சற்றுப் பெரிய சைஸ் பஸ் நிலையம், பவர்கட் பிரச்னை என்று தீராத பிரச்னைகளைத் திரும்பவும் கேட்டிருந்ததில்

வடக்கு விருதாங்கன் - இது சிதம்பரம் தொகுதிக்கு உட்பட்ட, நகரிலிருந்து சுமார் இருபத்தைந்து கிலோமீட்டர் தொலைவிலுள்ள சிறு கிராமம்.

என்ன விசேஷம் இங்கே?

இருபதாம் நூற்றாண்டின் விளிம்பில் நிற்கிற நிலையில், இந்த கிராமத்தை அடைவதற்கு எந்தப் புறமும் சாலை கிடையாது!

சுமார் 200 வோட்டுகள் உள்ள இக்கிராமத்துக்கு, எலெக்ஷன் முடிந்து, நன்றி சொல்ல வந்து போனபின் எம்.எல்.ஏ.வோ, பிறரோ எட்டிக்கூடப் பார்க்கவில்லை என்று குமுறுகிறார்கள் கிராம வாசிகள்.

ஏன் வரவில்லை?

வந்தால் சாலை கேட்பார்களே!

சாலை போட வேண்டியதுதானே?

அதில் தானே சிக்கல்!

என்ன சிக்கல் என்றால், சாதிப் பிரச்னை.

வடக்கு விருதாங்கனுக்கு முன்புறம் உள்ளது தென்பாதி கிராமம். தென் பாதியைக் கடந்துதான் வ. விருதாங்கனுக்கு வர வேண்டும். ஆனால் சாலை கிடையாது. வெறும் சேறும் சகதியுமான இரண்டடி வரப்பில் லாங்-ஜம்ப் செய்தபடியே தாவி வரவேண்டும். கொஞ்சம் சறுக்கினால் மண்ணின் மைந்தனாகி விடுவீர்கள்! (ஸாரி, சேறின் செல்வன்.)

இந்த 'வழி'யும் சாலைக்கான நிலமல்ல. தென்பாதி கிராமத்தைச் சேர்ந்த சிலருக்குச் சொந்தமான பட்டா நிலங்கள் அவை.

சாலை போடப்பட வேண்டுமென்றால்

# லாங்-ஜம்ப் தெரிந்தால் இந்த கிராமத்தில் நுழையுங்கள்!

இந்த நிலச் சொந்தக்காரர்கள் தம் நிலத்தை விட்டுக் கொடுப்பது தவிர வேறு வழியில்லை.

ஆனால் விட மறுக்கிறார்கள்.

காரணம் - தென் பாதி கிராமத்தை ஒட்டியுள்ள சேரிப் பகுதி மக்கள், அவர் தம் சமூகத்தில் யாராவது இறந்தால் அந்தச் சாலையில்தான் பிணத்தை எடுத்துக் கொண்டு சுடுகாட்டுக்குச் செல்வார்கள். அது அவமரியாதை என்று இவர்கள் கருதுவதுதான்!

இந்தக் காலத்தில் இப்படி சாதியை முன்நிறுத்தி, ஒரு சாலை கூடப் போட விடாமல் தடுக்கிறதாவது என்று தென் பாதிக்காரர்களைப் பார்த்துப் பேசப் போனோம்.

''முன்ன இருந்த பிரசிடென்ட்டு, ரோடு போட எவ்வளவோ முயற்சி செஞ்சாருங்க. ஒண்ணும் நடக்கலை. இப்ப புதுசா வந்திருக்கற பிரசிடென்ட்டு (கவுன்சிலரைத்தான் சொல்கிறார்கள்) சித்ரா நடராஜன் அவங்க பங்குக்கு முயற்சி பண்றாங்க. எம்.எல்.ஏ. அழகிரி எவ்வளவோ ட்ரை பண்ணாரு. ஒண்ணும் நடக்கலை!'' என்று அழாக்குறையாகச் சொன்னார் இளம்பரிதி என்கிற தென்பாதி கிராமவாசி.

''இது, யார் முயற்சி எடுத்தாலும் தீராத விசயங்க. சாதி சமாசாரம் பாருங்க!'' என்றார் பன்னீர்செல்வம் என்கிற தி.மு.க. இளைஞரணிக்காரர்.

நிலச் சொந்தக்காரர்களுள் ஒருவரின் வாரிசுகள் எதிர்ப்பட்டார்கள்.

செல்வகுமார், பாஸ்கரன் என்ற அந்த இளைஞர்கள், ''சேரிக்காரங்களுக்குத் தனியா பாதை இருக்கு. ஆனா அதுல போக மறுக்கறாங்க. 'சரி, இங்க பாதை போட்டால்தானே... போவீங்க? சாலையே கிடையாது, போங்கடா'ன்னு வுட்டுட்டோம்!'' என்றனர் அலட்சியமாக.

''இப்ப சாலையில்லாம சேறுலயும் சகதியிலயும் நடந்து கஷ்டப்படறது அவங்க மட்டுமில்லாம நீங்களும் கூடத்தானே?'' என்றோம்.

''எங்களுக்குக் கஷ்டம்தான். ஆனா அவங்க வர்றதில்லை இல்ல, இப்ப? அது போதும்!''

அதிர்ந்து போனோம்!

''இப்படி உள்ளார வர்றதுக்குப் பாதை கூட இல்லேன்னு எங்க கிராமத்துக்கு எந்த வசதியும் வர்றதில்லீங்க. ரேஷன், பஞ்சாயத்து எதுவும் கிடையாது. எல்லாம் தெற்கு விருதாங்கனுக்குப் போயிடுது. அதிகாரிகள், வர மறுக்கறாங்க. கலெக்டர் வந்து பார்க்கறதாச் சொன்னாரு. ஆனா, மூணு தடவை அவர் 'ட்ரிப்'பை ஒத்தி வெச்சிட்டாங்க. ஏன்னா, கலெக்டரோட வண்டி உள்ள வரணும்னா, குறைஞ்சது இருவது லாரி மண்ணாவது அடிக்கணும். அதுக்குச் சுணங்கிக்கிட்டுத்தான், கலெக்டரையே வர விடாம செய்யறாங்க'' என்றார் வடக்கு விருதாங்கனைச் சேர்ந்த இளைஞர் ரவி.


• இளம்பரிதி

''பேசாம கலெக்டரு ஆபீஸ் முன்னால போயி, தொடர் உண்ணாவிரதம் இருக்கலாம்னு முடிவு பண்ணியிருக்கங்க!'' என்றார் ராஜமாணிக்கம் என்கிற முதியவர்.

எம்.எல்.ஏ. அழகிரியிடம் இது குறித்துப் பேசியபோது,

''தென்பாதி கிராமத்தவர்கள் சாலை போட விட மறுக்கிறார்கள். நான் எத்தனையோ பேசிப் பார்த்தும் பிரயோஜனமில்லை. ஹரிஜன காலனியருக்குத் தனிப்பாதை கூட நானே போட்டுத் தரச் செய்தேன். அப்போதும் இவர்கள் முரண்டு பிடிக்கிறார்கள். இந்தப் பிரச்னைக்கு ஒரே தீர்வுதான் உண்டு. சாலை போட வேண்டுமென்றால் சில தனி நபர்களின் பட்டாவாக உள்ள நிலங்களை அரசு கையகப்படுத்த வேண்டும். இது குறித்துப் பலமுறை நான் கடிதம் எழுதி விட்டேன். சாதி அரசியல் குறுக்கிட்டால்தான் அவையெல்லாம் கிணற்றில் போட்ட கல்லாக இருக்கின்றன'' என்றார்.

''என்னதான் சீர்திருத்தம் பேசினாலும் மக்கள் இன்னும் பழைமை மாறாமல் சாதிய உணர்வு மேலோங்கித்தான் இருக்கிறார்கள். அந்த மனோபாவம் மாறாத வரை இந்தப் பிரச்னைக்கு விடிவே இல்லை!'' என்று வருத்தப்பட்டார் அழகிரி.


• ராஜமாணிக்கம்


• ரவி

கொஞ்சம் வியப்பாக இருந்தது.

மூன்று வருட இடைவெளியில் ஒரு பிரச்னை கூடவா தீர்ந்திருக்காது? மக்களின் ஒரே ஒரு எதிர்பார்ப்புக் கூடவா நிறைவேற்றப் பட்டிருக்காது? எங்கே போய்விட்டார் எம்.எல்.ஏ.?. என்ன ஆயிற்று உள்ளாட்சி நிர்வாகம்?

முதலில் சிதம்பரம் முனிசிபாலிடியின் கமிஷனர் சண்முகசுந்தரத்தை அவரது வீட்டில் சந்தித்தோம்.

சாலைப் பிரச்னையை முதலில் முன்வைத்ததில், "136 சாலைகளில் 86 சாலைகள் போட்டு விட்டோமே? எல்லாம் மழையில் சேதமாகி விட்டால் என்ன செய்வது?" என்றார் சகஜமாக.

ஒரு தம்மாத்தூண்டு மழைக்கு வாயைப் பிளக்கிற அளவுக்கா சாலையின் தரம் இருக்கும் என்றால், நோ ரிப்ளை.

"சாலை போட்டுவிட்டதாக நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் நாங்கள் நாளெல்லாம் சுற்றியதில் ஒரு சாலையாவது ஒழுங்காக இல்லையே?"

"முனிஸிபாலிடி கட்டுப்பாட்டில் வரக் கூடிய சாலைகளுள் 60% நாங்கள் 'கவர்' பண்ணிவிட்டோம். ஹைவேஸ் கட்டுப்பாட்டில் உள்ள சாலைகளில் நீங்கள் போயிருப்பீர்கள்! அவை மோசமாக இருந்தால் அதற்கு நாங்கள் பொறுப்பல்ல."

"இத்தனை பன்றிகளைப் பேணி வளர்க்கிறீர்களே? மலேரியா, யானைக்கால் நோய் என்று மக்கள் பயந்து போய் இருப்பதாகச் சொல்கிறார்கள்?"

"பன்றிகள் பெருத்துவிட்டது வாஸ்தவம் தான். கலெக்டர் அனுமதி வாங்கி, கொஞ்ச நாள் முன்பு ஒரு முறை 'ஷூட்டிங்' நடத்தினோம். வரும் வாரத்திலிருந்து மறுபடி பன்றி வேட்டை தொடங்க உள்ளது."

"சாக்கடை, கொசு உற்பத்தி... நகரில் சுகாதாரமே இல்லை. மக்கள் எப்படி வாழ்வது?"

"ஃபைலேரியல் டிப்பார்ட்மென்ட் என்று இதற்கொரு துறை தனியாக இருக்கிறது. அவர்கள் முனைந்து நடவடிக்கை எடுக்கா விட்டால் நாங்கள் என்ன செய்ய முடியும்? இருப்பினும் ஹெல்த் டெபுடி டைரக்டருக்குக் கடிதம் எழுதியிருக்கிறோம். கொசு மருந்து தருவதாகச் சொல்லியிருக்கிறார்கள்!"

கொசு மருந்துக்கே இப்போதுதான் கடிதம், பதில் என்றால் கொசுக்களின் பிறப்பிடமான சாக்கடை, பாதாள சாக்கடை சீரமைப்பெல்லாம் என்ன ஆவது என்று சேர்மன் சந்திர பாண்டியனிடம் (த.மா.கா.) கேட்டோம்.

"டிரைனேஜ் தானே? இந்தா... மார்ச் மாசம்

---

வந்து பாருங்க. துப்புரவா சரி பண்ணிற மாட்டோம்?"

"இந்த சாலைகள்..."

"தொண்ணூத்தெட்டு டிசம்பர்ல வந்து பாருங்க... சும்மா துபாய் கணக்கா ஆக்கிரு வமில்ல?"

"வீடுகளுக்கெல்லாம் அதிக வரி விதிக்கற தாகவும் லாட்ஜுகளுக்கு மட்டும் (லஞ்சம் வாங்கிக் கொண்டு) குறைந்த வரி கேட்கப் படுவதாகவும் மக்கள் சொல்கிறார்களே?"

"அதெல்லாம் சும்மாங்க. வரி ஜாஸ்தின்னு லாட்ஜுக்காரங்கதான் வந்து புகார் பண்ண றாங்க. ஒரு விஷயம் தெரியுமா? இன்னும் வரி கலெக்ஷனே ஆவலை. ஒரு கோடியே இருவது லட்சம் பாக்கி இருக்குது. இதுவரைக்கும் நடந்திருக்கிற நலப்பணிகளெல்லாம் (?) மானி யங்கள் மூலமாத்தான் நடந்திருக்குதே தவிர, வரிகள் மூலமான வருவாயால் இல்லை!"

"நகர்ல அடிக்கடி பவர்கட் ஆவுதாமே?"

"ஆமாங்க. அதுக்கு நாங்க என்ன செய்ய முடியும்? நெய்வேலியிலேயே ஏதோ கோளாறு இருக்குது."

"இந்த... ரயில்வே மேம்பாலம் கட்டணும்னு சொல்லி வருஷக்கணக்கா மக்கள் கேட்டுட்டே இருக்காங்க..."

"இப்பத்தான்... இப்பத்தான் நம்ம நிதிய மைச்சர் கிட்டப் பேசி, அதுக்கான நிதி சாங் ஷன் வாங்கிட்டம்! மொத்தம் பதினஞ்சு கோடி ரூபா ப்ராஜெக்ட்! ஏழரைக் கோடி ரயில்வே தந்துரும். மிச்சத்தை நம்ம கவர் மெண்ட் தரணும்னு ஏற்பாடு. அரசாங்கம் அலாட் பண்ண வேண்டியதுதான் பாக்கி. அது வந்ததும் காரியம் தொடங்கி, உடனே முடிச்சிறமாட்டம்?"

வார்த்தையில் வர்ண ஜாலங்கள் காட்டு வதில் வித்தகராக இருக்கிறார் சேர்மன். 'இதோ, இதோ' என்று அவர் சொல்கிற எல் லாமே 'எதோ, எதோ' என்று ஆண்டுக் கணக்காக மக்கள் கேட்டுக் கொண்டிருக்கிற விஷயங்கள்.

"இவரு எல்லாம் சொல்லுவாரே தவிர, எதும் செய்யமாட்டாருங்க!" என்று பொது மக்கள் மட்டுமல்ல; ஒரு சில கவுன்சிலர்களே நம்மிடம் வெளிப்படையாகப் பேசியது அதிர்ச்சியாக இருந்தது.

இதே மக்கள் பிரச்னைகளை 1994ல் சிதம்பரம் தொகுதி எம்.எல்.ஏவாக இருந்த போது (இப்போதும் இவரே. இப்போது த.மா.கா. அப்போது வெறும் கா.) அழகிரியிடம் முன்வைத்தோம். அப்போது இதற்கெல்லாம் தீர்வாக அவர் சொன்ன ஒரே பதில்: "லோக் கல்பாடி எலெக்ஷன் நடத்தினாத்தாங்க இதெல்லாம் சரிப்படும்." (காண்க - 27.2.94 கல்கி/ பக். 48).

அவரது அந்தப் பேட்டியையே அவர் முன் கொண்டு காட்டி, "உள்ளாட்சித் தேர் தல்கள் நடந்து விட்டன.

"எங்க தாத்தாவுக்கு அறுபது வயசு ஆகுது. இப்பக் கூட நல்லா டான்சாடுவாரு."



"எங்க தாத்தாவுக்கு எண்பது வயசு ஆகுது. இப்பக்கூட நல்லா 'தள்ளாடுவாரு.'"

- தாரமங்கலம் மகேஷ்

சிதம்பரத்தைப் பொறுத்த வரை, கட்சி மாறுபாடு கூட இல்லை. எம்.எல்.ஏ., சேர்மன், பெரும்பாலான கவுன்ஸிலர்கள் எல் லோருமே ஒரே கட்சிக் காரர்கள். நகரச் சீர மைப்பு ஏன் இன்னும் நடைபெறவில்லை?'' என்று கேட்டோம்.

"இப்பவும் சொல்லலாம், உள்ளாட்சி அமைப்புகளுக்குப் போதிய அதிகாரம் தரப்படலைன்னு" என்று சொல்லிச் சிரித் தார்.

"சாலைகள் சரியில்லை என்றால் அதற் கான நடவடிக்கைகள் எடுக்க வேண்டியது சேர்மனும் கமிஷனரும்தான். இதில் சோகம் என்னவென்றால் சாலை போடுவதற்கான நிதியை, சரியாக மழைக்காலத்தில் தருகிறது அரசு. மழையில் சாலை போட்டால், அது மழையோடே போய்விடுகிறது..."

"மழைக்காலம் முடிந்தபின் போடலாமே?"

"முடியாதே! அந்தந்த ஃபைனான்ஷியல் இயருக்குள் முடித்துக் கணக்குக் காட்ட வேண்டி இருக்கிறதே."

சாக்கடை, பன்றி, கொசு போன்ற சகல பிரச்னைகளுக்கும் சேர்மன்தான் பொறுப் பேற்றுச் செய்ய வேண்டும் என்று கைகாட்டி

விடுகிறார் அழகிரி.

"ஐயா, நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?"

"பத்து கோடி செலவில் 110KV துணை மின் நிலையம் ஒன்றை சிதம்பரத்துக்குக் கொண்டு வந்திருக்கிறேன். முன்பு இருந்தது, வெறும் 33-KV நிலையம்தான்! மின்சார வாரியத்தில், ஒரு டிரான்ஸ்ஃபார்மரை மாற்றித்தரச் சொல்லிக் கேட்டார்கள். ஐம்பது லட்சம் ப்ராஜெக்ட் அது. முதல்வரிடம் பேசி, உடனடியாக முடித்துக் கொடுத்தேன். ஏழு லட்சம் செலவில் குடிநீர் ஓவர்ஹெட் டாங்க், பாளையங் கோட்டை என்ற இடத்தில் 3KV துணை மின் நிலையம், ஸ்ரீமுஷ்ணத்தில் தீயணைப்பு நிலையம் என்று என் எல்லைகளுக்கு உட்பட்ட விஷயங்களில் நான் குறைவைக்காமல் செய்துகொண்டுதான் இருக்கிறேன். ஆனால் சாலை, குடிநீர், வரி, சாக்கடை போல இவையெல்லாம் மக்களை மிக நேரடியாக பாதிக்கிற விஷயங்கள் அல்ல என்பதால் இவற்றின் முக்கியத்துவத்தை உணரக் கொஞ்சம் நாளாகும்."




"என்னை எப்படியாவது பிழைக்க வச்சிடுங்க டாக்டர்'னு சொல்லி அவர் கையில 1000 ரூபாயைத் திணிச்சேன்!"

"ஆபரேஷன் சக்ஸஸ் ஆயிடுச்சாக்கும்!"

"அதான் இல்லே, மாத்திரை மருந்தே போதும்; ஆபரேஷன் வேண்டாம்னு சொல்லி அனுப்பிட்டார்!'

— சீர்காழி வி. ரேவதி

"சிதம்பரத்தில் ஒரு பெண்கள் கல்லூரி வேண்டும் என்று வெகு நாட்களாகக் கோரிக்கை இருக்கிறதே?"

"வந்தாச்சு சார்! இங்கே நந்தனார் மகளிர் மேல்நிலைப் பள்ளி என்று ஒரு பள்ளி இருக்கிறது. அதை அறிவியல், கலைக் கல்லூரியாக மாற்ற முதல்வரிடம் பேசி, ஒப்புதலும் வாங்கி இருக்கிறேன். விரைவில் ஆணை வந்து விடும்."

"தொழிற்சாலைகளே இல்லாத நகரமாக சிதம்பரம் இருக்கிறது. படித்த இளைஞர்கள், வேலை வாய்ப்பு இல்லாமல் அவதிப்படும் நிலை. மேலும் வேலை இல்லாத வெட்டித் தனம், ரவுடித்தனமாக மாறி பிரச்னை தருவதாகப் பலர் புகார் செய்கிறார்களே?"

"இங்கே ரவுடிகள் தொல்லை அதிகம் என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். அவர்களுக்கு ஊக்கம் தந்து தூண்டிவிடுபவர்கள் அரசியல்வாதிகளும் போலீஸும் தான்..."

(இடைமறித்து) "நீங்களும் அரசியல்வாதி தானே?"

"அதில் சந்தேகம் வேண்டாம். ஆனால் நானோ, வேறெந்த ஒரு த.மா.கா.காரனோ இந்தக் கீழ்த்தரமான காரியத்தைச் செய்வதில்லை. ஆனால், தற்போது புதிய எஸ்.பி. சைலேந்திரபாபு வந்தபின் ஓரளவு ரவுடிகள் கொட்டம் அடக்கப்பட்டு விட்டது.

"தொழிற்சாலை பற்றிக் குறிப்பிட்டீர்கள். தொழில் தொடங்குமளவு அடிப்படை வசதிகள் இல்லாத குறு நகரம் இது. ஆனாலும் 'சிட்கோ' உதவியுடன் ஒரு தொழிற்பேட்டை - முற்றிலும் சிறு தொழில்களுக்கானது - விரைவில் இங்கே தொடங்கப்பட முயற்சிகள் எடுத்து வருகிறேன்."

"விரைவில் என்றால்?"

"என்னால் கால வரம்பு சொல்ல முடியவில்லை. ஏனென்றால் நம் அரசு நிர்வாகம் அப்படி! கலைஞர் ஒருவர்தான் வேகமாக உள்ளாரே தவிர, ஆட்சி வேகமாக இல்லை. அதிகாரிகள் வேகமாகச் செயல்படுவது இல்லை. இந்த நிலையில் நான் எப்படி கால அவகாசம் பற்றிய உத்தரவாதம் தர முடியும்?" என்று கேட்டார் அழகிரி.

சிதம்பரம் தொகுதியின் முன்னேற்றம் குறித்து எம்.எல்.ஏ.வுக்கு உள்ளார்ந்த அக்கறை இருப்பது அவர் பேச்சில் தெரிந்தது. ஆனால் எதுவுமே செயல் வடிவம் பெறாததன் காரணம், புரியாத புதிராகவே இருக்கிறது.

'ஏதாவது நடந்து கொஞ்சமாவது சுகாதாரம், சுற்றுச் சூழல் மேம்படாதா' என்று ஏக்கப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார்கள் மக்கள்.

— ஔரங்கசீப்

படங்கள் : சௌந்தர்ராஜன்






1997 டிசம்பர் 7
ஈசுவர கார்த்திகை 22
மலர் : 56
இதழ் : 19

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## நாராயணா, காப்பாத்து!

டெல்லியில் நடந்த அரசியல் நாடகம் முடிந்து திரை விழுந்து விட்டது! கதாநாயகன், வில்லன், சதி, மிரட்டல், சஸ்பென்ஸ் என்று சகலமான மசாலா அம்சங்களும் நிறைந்த மலிவான நாடகம்! எப்படியெல்லாம் அரசியல் நடத்தப்படக் கூடாது என்பதற்கான செயல்முறை விளக்கமாகவே நடந்து முடிந்த நிகழ்ச்சிகளை நாம் கொள்ளுதல் வேண்டும்.

முதுபெரும் காங்கிரஸ் கட்சி இதுவரை கண்டுள்ள தலைவர்களுள் மிக மிக மோசமானவர் சீதாராம் கேசரி என்று துணிந்து விமர்சிக்கலாம். ஐ.மு. அரசுக்கு ஆதரவு - ஆதரவு வாபஸ் என்று மனம் மாறி மாறி ஊசலாடுவதும் சிறுபிள்ளைத்தனமான நிபந்தனைகளை முன்வைப்பதுமாகக் காலத்தைக் கடத்தியவர், கடைசி ஒரு வாரத்தில் அளவிடமுடியாத தீங்கை நாட்டுக்கு இழைத்திருக்கிறார்.

அவருடைய ஊசலாட்டத்தினால் விளைந்த அரசியல் நெருக்கடியில் நாட்டு நிர்வாகமும் பொருளாதாரமும் ஸ்தம்பித்துப் போய்க் கிடந்தன. ரூபாயின் மதிப்பு சரிந்த நிலையிலும் ரிசர்வ் வங்கி நடவடிக்கை எதுவும் எடுக்க இயலாமல் திணறியது.

ஐக்கிய முன்னணிக்குச் சங்கடம் விளைவிக்க வேண்டும் என்ற நோக்கில்தான் செயல்பட்டார் கேசரி. ஆனால், அதிக சேதம் விளைந்திருப்பது காங்கிரஸ் கட்சிக்குத்தான். நாடு சுதந்தரம் அடைவதில் முக்கிய பங்கு வகித்த அக்கட்சி, சுதந்தரப் பொன் விழா ஆண்டில் இப்படி நாட்டுக்கே




தலைகுனிவு ஏற்படுத்தியிருப்பது மிகப் பெரிய சோகம்!

நாட்டின் ஒட்டுமொத்த நிலையும் கடுமையான பாதிப்புக்குள்ளாகும் இத்தகைய சந்தர்ப்பங்களில், குடியரசுத் தலைவரின் பங்கும் பொறுப்பும் முக்கியத்துவம் எய்துகின்றன. கேசரி தமது ஆதரவு வாபஸ் முடிவை எழுத்து மூலமாக முறைப்படி தெரிவிக்காத நிலையில், குடியரசுத் தலைவர் எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது என்பது வாஸ்தவம்தான்.

ஆனால் ஜனநாயகத்தின் முக்கிய அங்கமான பாராளுமன்றத்தின் நடவடிக்கைகள் ஒரு கட்சியின் அடாவடித்தனத்தினால் ஒத்தி வைக்கப்படுவது என்பது மிக அசாதாரணமான சூழல். ஆதரவு வாபஸ் என்று மிரட்டியதோடு மட்டுமின்றி, பாராளுமன்றத்தில் ரகளையும் செய்து இதற்குக் காரணமாயிருந்திருக்கிறது காங்கிரஸ். இந்த நிலையில் காங்கிரஸ் தலைவரை அழைத்துப் பேசும் தார்மிக உரிமை நாட்டின் மிக உயரிய பொறுப்பை வகிக்கும் குடியரசுத் தலைவருக்கு இருக்கிறது.

கேசரியிடமிருந்து குஜ்ராலுக்குக் கடிதம் வர வேண்டும், அதற்கு குஜ்ரால் முறைப்படி பதில் எழுத வேண்டும், அதன் பின்னர் கேசரி தமது ஆதரவு வாபஸ் கடிதத்தை வழங்க வேண்டும் என்று காத்திருந்த ஒரு வார காலத்தில் நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் இழப்பு கொஞ்ச நஞ்சமல்ல. கட்சிகள் தம்மிடம் வரட்டும் என்று காத்திராமல் இன்னும் சற்று முன்னதாகக் குடியரசுத் தலைவர் தாமே கட்சித் தலைவர்களை அழைத்துப் பேசியிருக்கலாம். 'நாடாளுமன்ற நடவடிக்கைகள் நின்றுபோக விடக்கூடாது; விரைவில் ஒரு முடிவு சொல்லுங்கள்' என்று கண்டிப்புடன் கேட்டிருக்கலாம்.

அரசியல் சாசனத்தில் குடியரசுத் தலைவருக்கு இந்த அதிகாரம் இருப்பதாகக் குறிப்பிடப் படவில்லை என்பது உண்மைதான். ஆனால் அரசியல் சாசனம் வடிவமைக்கப்பட்டபோது இதைப்




போன்ற அவலமான சூழ்நிலைகள் தோன்றக்கூடும் என்று அதன் வடிவமைப்பாளர்கள் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள். எனவே, சூழ்நிலைக்கு ஏற்ப தார்மிகப் பொறுப்புடன் குடியரசுத் தலைவர் செயல்பட வேண்டும் என்பது முக்கியமாகிறது.

ஆதரவு வாபஸைத் தொடர்ந்து குஜ்ராலும் தமது ராஜினாமாவைச் சமர்ப்பித்து விட்டார். எனினும் நாடாளுமன்றத்தைக் கலைக்கும்படி அவர் குடியரசுத் தலைவருக்குச் சிபாரிசு செய்யவில்லை. அந்த சிபாரிசு இருந்திருந்தால் கே. ஆர். நாராயணனின் பணி சற்று சுலபமாகியிருக்கும்.

இப்போது, நாடே குடியரசுத் தலைவரின் நடவடிக்கையை எதிர்நோக்கியிருக்கிறது.

உதிரிகளுடன் சேர்ந்துகொண்டு ஆட்சி அமைக்க காங்கிரஸ் முன்வருகிறது. பி.ஜே.பிக்கு மீண்டும் வாய்ப்புத் தர சிவசேனைத் தலைவர் பால் தாக்கரே கேட்கிறார். இவர்களுள் ஒருவருக்கு வாய்ப்புத் தரப்பட்டால் அது கணித ரீதியாகவும் சரி, தார்மிக ரீதியாகவும் சரி மிகப் பெரிய அநீதியாகவே இருக்கும். மீண்டும் குதிரை வியாபாரத்துக்கே வழிவகுக்கும்.

முன்னுக்குப் பின் முரணான நடவடிக்கைகளால் தமக்கும் கட்சிக்கும் மட்டுமின்றி, நாட்டுக்கே உலக அரங்கில் தலைகுனிவு ஏற்படுத்தியுள்ளார் கேசரி.

அந்த அவப்பெயரைத் துடைத்துப் போட்டு, புதிய பொலிவோடு நாடு முன்னேற்றப் பாதையில் செல்ல வேண்டும். அதற்குத் தேர்தல் ஒன்றே வழி.

'இன்னொரு தேர்தலை நாடு தாங்காது' என்று சில கட்சிகள் அலறுவது சுயநல அடிப்படையில்தான். மக்கள் மனத்தளவில் தேர்தலுக்குத் தயாராகி விட்டார்கள் என்பதுதான் உண்மை. இதை உணர்ந்து கே. ஆர். நாராயணன் செயல்பட வேண்டும். மக்களும் தங்கள் வாக்குரிமையைப் பொறுப்போடு பயன்படுத்தி ஸ்திரமான நல்லாட்சிக்கு வழிவகுக்க வேண்டும்.

# சிம்ரன் மாதிரி ஸ்லிம்மா இருக்கணுமா?

## டைனிங் டேபிள்

எங்கக்கா பிரேமி பத்தி போன வாரம் சொன்னேனில்லே... அவ ஒரு எக்ஸ்சேஞ்ச் ப்ரோக்ராம்ல யு.எஸ் போயிருந்தா. இரண்டு வாரம் டூர்... எங்கயாவது ரெஸ்டாரன்ட்ல சாப்பிடப் போனா முதல்ல பெரிய பேசின் நிறைய இலையும் தழையுமா பச்சைக் காய்கறியைக் கொண்டாந்து வைச்சுடுவாங்களாம். (அவ கூட போயிருந்த சில boys கூட 'மே' 'மே'ன்னு ஆடு மாதிரி குரல் எழுப்பி கேலியா சிரிப்பாங்களாம்!) அப்புறம்தான் நாம கேட்டிருக்கிற 'ஆர்டர்'படி உணவு வருமாம்... அங்கெல்லாம் அசைவம்தான் அதிகமா விரும்பிச் சாப்பிடறதா நாம நினைக்கறோம். உண்மையில் அப்படியில்ல.. காய்கறி பழங்களுக்கு ரொம்ப முக்கியத்துவம் தர்றாங்க அவங்க.

ஆனா நாம...? நேர் மாறுதல். டப்பா நிறைய சோறு. தொட்டுக்க கொஞ்சூண்டு பொறியல்! இப்படி ஊறுகாயளவு காய்கறி சாப்பிடறது போதவே போதாது. ஏனென்றால் காய்கறியிலே தான் வைட்டமின் சத்து இருக்கு. அரிசியிலயும் பருப்புலயும் அது ரொம்பக் குறைவு. உடம்போட நோய் எதிர்ப்பு சக்திக்கு வைட்டமின் ரொம்ப அவசியம்; ஆகையினாலே காய்கறியும் அவசியம்.

நம்ம பாட்டி, தாத்தா காலத்திலே இதை நல்லா உணர்ந்திருந்தாங்க. தினமும் கீரை, வாழைத்தண்டு, வாழைப்பூ. இப்படி எதாவது செய்வாங்க. அதைத் தவிர கிழங்கு, அவரை, பாவைன்னு வேற சேர்த்துக்குவாங்க...

அவங்களுக்கு எல்லாம் கொல்லையிலேயே விளைஞ்சது. வகை வகையா செஞ்சு சாப்பிட நேரமிருந்தது. நாம தூங்கிக் கண் முழிக்கிற போதே 9.20 லேடீஸ் ஸ்பெஷல் ஞாபகத்துல முழிக்க வேண்டியிருக்கேன்னுவீங்க... கொஞ்சம் திட்டமிட்டு செயல்பட்டோம்னா சுலபமா சத்தான காய்கறிகளை உணவோட சேர்த்துக்கலாம். ஒரு recipe சொல்றேன்:

ஒரு ஆப்பிள் தோல் சீவி துருவிக்கணும். ஒரு வெள்ளரிக்காய் தோல் சீவி துருவிக்கணும். நல்ல பிஞ்சான நிலக்கடலை (பச்சையா) ஒரே ஒரு கைப்பிடி இந்தத் துருவல் கலவைல சேர்த்து, உப்பு, மிளகுத் தூள் தூவி, புளிப்புக்குப் பத்து சொட்டு எலுமிச்சை சாறோ ஒரு தக்காளியோ சேர்த்துச் சாப்பிடலாம்.

வேணா ஸ்டாப் வாட்ச் வைச்சு டெஸ்ட் பண்ணுங்க... எவ்வளவு மெதுவா செஞ்சாலும் பத்து நிமிஷத்துல முடிஞ்சுடும் வேலை! (நிலக்கடலைக்குப் பதில் ஊறவைச்ச முளை கட்டின பச்சைப் பயறு வேணா சேர்க்கலாம்.)

இப்படி கொஞ்சம் கற்பனையைப் பயன்படுத்தி நாமே புதுப் புது salad உருவாக்கிக்கலாம். ஆனா இதுலயும் சில விஷயங்கள் மறக்காம கடைப்பிடிக்கணும்:



ஃப்ரிஜ்தான் இருக்கேன்னுட்டு பத்து நாளுக்கு ஆகறாப் போலே காய்கறிகளை வாங்கித் திணிச்சு வைக்காதீங்க. என்னதான் லேட்டஸ்ட் மாடல்னாலும் காய்கறியோட சத்து ஒவ்வொரு நாளும் கொஞ்சம் கொஞ்சமா குறையும்.

பொதுவாகவே காய்களோட வைட்டமின் சத்து, தோலையொட்டின பகுதியிலேதான் இருக்கும். அதனால தோலைச் சீவறேன் பேர் வழின்னு செதுக்கித் தள்ளாம, லேசா சுரண்டி எடுக்கணும். சுத்தமா கழுவிட்டா தோலோட கூட சமைக்கலாம், அரிஞ்ச பிறகோ தோல் எடுத்த பிறகோ கழுவக்கூடாது.

பச்சைக் காயா சாப்பிடும்போது, மறக்காம உப்புப் போட்டு நல்ல சுத்தமான தண்ணியில கழுவி எடுத்துட்டு அரியணும். இல்லாட்டி சத்து உடம்புக்குச் சேர்றதுக்குப் பதிலா பூச்சி வயிற்றுல சேரும்!

வேக வைக்கிற காயிலே நிறைய தண்ணி ஊத்தி அப்புறம் வடிச்சு எடுத்தா சத்தெல்லாம் 'குளோஸ்'. காய் வெந்த தண்ணியை சாம்பார்ல விடுங்க. இல்லாட்டி அப்படியே குடிச்சுடுங்க. நல்ல சூப் மாதிரி இருக்கும்.

'பச்சைக் காயெல்லாம் யார் சாப்பிடறாங்க. நல்ல எண்ணெயை ஊத்தி ரோஸ்ட் கேட்கறாங்க வீட்ல'ன்னு சலிச்சுக்கிட்டீங்கன்னா நான் என்ன பண்ணட்டும். குழந்தைங்களுக்காவது ஆறாவது/ஏழாவது மாசத்துலயே காய்கறி சுவைகளைப் பழக்கி விடுங்க... பயப்படாம துளி துளி வெரைட்டியா கொடுத்துப் பார்க்கலாம்.



சளியைப் போக்கற சக்தியிலே ஆரம்பிச்சு கான்ஸரைத் தடுக்கற சக்தி வரைக்கும் என்னென்னவோ ஜகஜ்ஜால சக்தியெல்லாம் கீரை, கொத்தவரை வகையராக்கள்ல ஒளிஞ்சுக்கிட்டிருக்கு. முக்கியமான ஒரு சக்தி என்ன தெரியுமா? பசியைக் குறைக்கற சக்தி! காய்கறிகள்ல fibre என்கிற நார்ச்சத்து உண்டு. மற்ற சத்துக்களைவிட இந்த நார்ச் சத்தை ஜீரணிக்கறதுக்குக் கூடுதலா நேரம் ஆகும். அதனால, காய்கறி நிறைய சாப்பிட்டா பசி தாங்க முடியும்; 'உள்ளே' போகிற சாதம் பருப்பு வகைகளோட அளவும் குறையும். எடை ஏறாம உடம்பும் ஸ்லிம்மா சிம்ரன் மாதிரி இருக்கும்... அதோட இன்னொண்ணு - நார்ச்சத்துக்கு கான்ஸரைத் தடுக்கற சக்தியும் உண்டு.

உருளைக் கிழங்கு வாயு; ராத்திரியிலே கீரை சாப்பிடக் கூடாது; பப்பாளி சாப்பிட்டா கர்ப்பம் கலையும்; இதெல்லாம் தேவையில்லாத தடைகள்ங்கறாங்க. கிழங்கு வகைகளோட பெருங்காயமோ பூண்டோ சேர்த்துச் சமைச்சா ஜீரணம் சுலபமா ஆகும். கீரையை ராத்திரியில ஆயத்தான் கூடாதேயொழிய தாராளமாச் சாப்பிடலாம். (இருட்டிலே ஆய்ந்தால் பூச்சி பொட்டு சட்டென்று கண்ணுக்குத் தெரியாது. வேறொண்ணுமில்ல...)

பப்பாளியில வைட்டமின் 'ஏ' நிறைய உண்டு. கண் பார்வைக்கும் தோல் மினு மினுப்புக்கும் உதவும்.

பொதுவா சைவ உணவுல இரும்புச் சத்து சுலபமா கிடைக்காது. அந்தச் சத்து மட்டும் குறைஞ்சுட்டா ரத்த சோகை வந்து உடம்பை ரொம்ப வாட்டிடும். அதனால சைவ உணவுக்காரங்க - குறிப்பா தாய்க்குலம் - இரும்புச் சத்துள்ள பண்டங்களை வாரத்துல இரண்டு மூணு முறையாவது சேர்த்துக்கணும். எதெதில அது இருக்குன்னா - முருங்கைக் கீரை, அன்னாசிப் பழம், வாழைப் பழம், பேரீச்சம்பழம், இதுல கீரையைத் தவிர மத்த எல்லாமே 'சமைக்கவே வேண்டாம்... அப்படியே சாப்பிடலாம்!' ஞாபகமா சாப்பிடணும், அவ்வளவுதான்!

ஞாபக சக்திக்கு என்ன சாப்பிடலாம்னு கேட்கறீங்களா... அதுக்குத்தான் சுமி இருக்கேனே... வாரா வாரம் வந்து ஞாபகப்படுத்தி அன்புத் தொல்லையால உங்களை அழிச்சுட மாட்டேன்...?!

— சுமி

அருண் சரண்யா

# தூய்மை

"இனியனூர் வரவேற்கிறது". அறிவிப்புப் பலகையைக் கார் நெருங்கியது. "சரியான தற்குறி கிராமம்கிறதை இந்த போர்டிலேயே நிரூபிச்சுட்டாங்க" என்று ஏளனமாகத் தன் காரோட்டிக் கணவனிடம் கூறினாள் ரேஷ்மா.

ஒற்றையடிப் பாதையை விடக் கொஞ்சம் தான் அகலம் என்பதால் மிக மெதுவாகவே கார் நகர வேண்டிய கட்டாயம்.

பெரிதாக இரண்டு ஐயனார் உருவங்கள் எதிர்ப்பட்டன. பக்கத்தில் பல்வேறு அளவுகளில் மண்குதிரைகள். வழியில் ஓர் ஓடை குறுக்கிட்டது. வலமா, இடமா எப்படிச் செல்ல? ஸ்டீரிங்கை ஒடிப்பதற்கு முன் அர்ஜுன் சற்றே தயங்க, எங்கிருந்தோ ஒரு பிஞ்சுக் குரல் கேட்டது.

"அய்யா, அக்கா, சூடா தேத்தண்ணி சாப்பிடறீகளா? அம்பது காசுதேன்." ஒரு பித்தளைத் தூக்கில் டீயை வைத்துக் கொண்டு சிரமத்துடன் நடந்து வந்து கொண்டிருந்தான் அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுவன். கூடவே சிறு மண் கோப்பைகளை எடுத்து வந்தது அவனது தங்கையாக இருக்க வேண்டும்.

"சூடா இருக்குமாடா?" என்று அர்ஜுன் கேட்க, "ஓ" என்று உற்சாகமான பதில் வந்தது. தூக்கிலிருந்து மண் கோப்பையில் டீயை சரிக்கத் தொடங்கினான் அந்தச் சிறுவன்.

"என்னது இந்த டீயைக் குடிக்கப் போறீங்களா? இங்கே சுற்றுப்புறமே சரியில்லீங்க. ஓடையைப் பார்த்தீங்க இல்லே, எவ்வளவு அழுக்குத் தண்ணி.. சரி சரி நான் சொல்றதை நீங்க எங்கே கேட்கப் போறீங்க? டேய், கொஞ்சம் இரு. அந்த அசிங்கம் பிடிச்ச மண் கப்பெல்லாம் வேண்டாம்" என்றபடி ரேஷ்மா தன் முதலைத் தோல் கைப்பையிலிருந்த பிளாஸ்டிக் கோப்பையை எடுத்து அந்தச் சிறுவனிடம் கொடுத்தாள். "இதிலே ஊத்திக் கொடு அந்த டீயை."

"உங்களுக்கும் தரவா அக்கா?" என்று அந்தச் சிறுவன் கேட்க, தன்னை அவன் அக்கா என்று அழைத்ததற்கும், அந்த 'மட்டமான' டீயைக் குடிக்க அழைப்பு விடுத்ததற்குமாகச் சேர்த்து – அருவருப்பில் சிலிர்த்துக் கொண்டாள் ரேஷ்மா. பின், சுற்றி வரப் பார்த்தாள். எங்கெங்கும் தென்னை மரங்கள். 'இதில் பாதியை வெட்டி விட்டால் அழகாக ஒரு மாளிகை கட்டலாம்.'



அவள் பார்வையைத் தவறாகப் புரிந்து கொண்டு "இளநீ வேணுமா?" என்று அந்தச் சிறுவன் கேட்டு, மறுப்பைப் பெற்றுக் கொண்டான். தேநீரைக் குடித்து முடித்த அர்ஜுன் காசைத் தர, நன்றி பொங்க வாங்கிக் கொண்டான். அர்ஜுன் குடித்து விட்டு தூர எறிந்த பிளாஸ்டிக் கோப்பையை ஆர்வத்துடன் பொறுக்கிக் கொண்டான் அந்தச் சிறுவன்.

கார் நகர, ரேஷ்மாவின் ரன்னிங் காமெண்ட்ரி தொடர்ந்தது. "மட்டமான இராமம். அங்கே பாருங்க மரத்தடியிலே நாலு பசங்க நின்னு கூச்சமில்லாம ஒண்ணுக்குப் போறதை. கவரெல்லாம் வரட்டி. படிப்பில்லேன்னா என்னங்க, நம்மையும் நம்ம சுற்றுப்புறத்தையும் அழகா, சுத்தமா வெச்சுக்கணும்கிற அடிப்படை அறிவு வேணாம்? போன வாரம் கூட ஒரு தேசியக் கருத்தரங்கத்திலே புரொபசர் மித்ரா 'சுற்றுப்புறத் தூய்மை' பற்றி எவ்வளவு அருமையாகப் பேசினார்? ஊம், அதெல்லாம் இதுகளுக்கெங்கே தெரிஞ்சிருக்கப் போகுது!"

"என்ன ரேஷ்மா இது, நாம என்ன இங்கே தங்கவா போறோம்! இந்த ஏரியாவிலே ஒரு தொழிலதிபர் தோல் தொழிற்சாலையைத் தொடங்கப் போறார்ங்கிற தகவல் நமக்கு அட்வான்ஸாக் கிடைச்சிருக்கு. அதனாலே இங்கே அடிமாட்டு விலைக்குச் சில ஏக்கரா வளைச்சுப் போட்டு, அப்புறம் யானை விலைக்கு விற்கப் போறோம், அவ்வளவுதானே?" என்றான் அமைதியாக.

"உண்மைதாங்க. இருந்தாலும் இவங்க இவ்வளவு நாஸ்டியா ஊரை வச்சுக்கிறதைப் பார்த்துட்டு என்னாலே சும்மாயிருக்க முடியல்லே. ஓசோன் படலம் உடையுதுன்னா ஏன் உடையாது?"

அந்த ஏ.சி. கார் கிராமத்தினுள் மேலும் நுழைந்தது.

# இளவரசி டயானா இறந்த இடத்தில்...



• மெழுகு டயானாவுடன் பரிதி இளம்வழுதி...

கடந்த செப்டம்பர் மாதம் மொரிஷியஸில், காமன் வெல்த் பாராளு மன்ற அமைப்பின் மாநாடு ஒன்று நடந்தது. அந்த மாநாட்டில், தமிழக அரசின் சார்பில் கலந்து கொள்ளும் வாய்ப்பு மட்டுமல்ல, அப்படியே பிரான்ஸ் இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கும் செல்லக்கூடிய அதிர்ஷ்டமும் அடித்தது நமது துணை சபாநாயகர் பரிதி இளம் வழுதிக்கு. அப்படிச் சென்ற போது பாரீஸ் நகரில் இளவரசி டயானா விபத்துக்குள்ளான இடத்தைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார். அந்த அனுபவத்தைப் பற்றி...



ஆகஸ்ட் மாதம் 31ம் தேதி டயானா மரணமடைந்தார். நான் பாரீஸ் சென்றது செப் டம்பர் 27ம் தேதி. அங்கே எனக்குத் தெரிந்த பிலிப் என்பவர் வீட்டில் தங்கியிருந்தேன். அவரது மகன்களான ராஜன், தயாளன், மற்றும் நண்பர் ஜீவா ஆகியோர் என்னை பாரீஸ் நகரைச் சுற்றிக் காட்ட அழைத்துச் சென்றனர். பல இடங்களையும் பார்த்து விட்டு, டயானா விபத்தில் இறந்து போன சுரங்கப்பாதைக்கு வந்து சேர்ந்தோம்.

பாரீஸ் நகரம் எட்டாவது மாவட்டத்தில் உள்ள டெல் அல்மா என்ற இடத்தில் அந்த சுரங்கப் பாதை இருக்கிறது. அருகே ஸீன் (Seine) நதி ஓடுகிறது. சுரங்கப்பாதையின் நடுவில் வரிசையாகத் தூண்கள் இருக்கின்றன. அந்தத் தூண்களுக்கு மேலே, சுரங்கப் பாதைக் குக் குறுக்காக மற்றொரு பாதை இருக்கிறது. டயானாவின் கார், நான்காவது தூணில்தான்



• விபத்து நடந்த சுரங்கப்பாதை...



• சுரங்கப் பாதையின் மேலே அஞ்சலி...

மோதியது. ஆனால் அந்த இடத்தில் கார் களை நிறுத்தியோ, மக்கள் நடந்தோ சென்று பார்ப்பது கொஞ்சம் ரிஸ்க். காரணம் இருபுற மும் விர், விர்ரென்று எப்போதும் வாகனங்கள் பறந்து கொண்டேயிருக்கும். சரியாக டயானா இறந்த இடத்துக்கு மேலே அதாவது சுரங்கப் பாதையின் மேலே குறுக்காக உள்ள பாதை யில், தீ கொழுந்து விட்டு எரிவது போன்ற ஓர் அமைப்பை (சின்னத்தை) பத்தடி உயரம், பத்தடி விட்டமுள்ள கிரானைட் தூணில் உருவாக்கி வைத்திருக்கிறார்கள். இந்த அமைப்பு டயானா, இறப்பதற்கு முன்பிருந்தே அங்கிருக்கிறது!

சுரங்கப் பாதைக்குள் சென்று, அவர் இறந்த இடத்தில் அஞ்சலி செலுத்துவது ஆபத்து என்பதால், மக்கள் மேலே உள்ள அந்த கிரா னைட் தூணைச் சுற்றி மலர்க் கொத்துக்களை யும், மலர் வளையங்களையும் வைத்து அஞ்சலி செலுத்துகிறார்கள். நான் சென்ற போது நூற் றுக்கு மேற்பட்டவர்கள் அங்கு இருந்தார்கள். அயர்லாந்திலிருந்து வந்திருந்த ஜோன் என் னிடம் 'நீங்கள் ஆசியர்தானே?' என்றதும், நான் 'ஆமாம்... அதிலும் இந்தியன்... தமிழன்' என் றேன்.

"உங்கள் நாட்டு ஏழை மக்களுக்குச் சேவை செய்வதில் மிகவும் ஆர்வமாய் இருந்தார் டயானா!" என்று சொல்லும் போதே அவர் கண்களிலிருந்து கண்ணீர். உள்நாட்டுப் போர் நடக்கும் நாடுகளில் கண்ணி வெடியால், கை, கால்களை இழக்கும் அப்பாவி மக்களுக்கு நிவா ரணம் கொடுப்பதற்காக ஓர் அமைப்பை வைத் திருந்தார் டயானா. அந்த அமைப்பில் செயல் பட்டுக் கொண்டிருப்பவராம் ஜோன்.

அந்த கிரானைட் தூணில் அஞ் சலி செலுத்த வரும் மக்கள், பல ஹைகூ கவிதைகளையும், வசனங் களையும் காகிதத்தில் எழுதி ஒட்டி வைத்திருந் தார்கள். 'ஒரு ரோஜா இங்கேதான் கருகிப் போனது!' என்று பாரீஸ் நகரைச் சேர்ந்த லியா என்பவர் எழுதி இருந்தார். 'நீ வசித்ததோ அரண் மனையில் ஆனால் வாழ்ந்ததோ ஏழையின் உள்ளங்களில்!' என்று ஜெர்மனியைச் சேர்ந்த ஒருவர் எழுதியிருந்தார். மலர்க் கொத்தை வைப்பவர்கள், கர்ச்சீப்பால், கண் களைத் துடைத்துக் கொண்டே வருகிறார்கள். அந்தச் சூழலே மிகவும் இறுக்கமாக இருந்தது.

அதன் பின்னர் நான் இங்கி லாந்துக்குச் சென்றபோது, டயானா வாழ்ந்த கென்ஸிங்டன் அரண்மனை, அவரை அடக்கம் செய்யும் முன் சடங்குகள் நடந்த வெஸ்ட்மினிஸ்டர் அபே ஆகிய இடங்களை யும் பார்த்தேன். மெழுகுச் சிலைகள் வைக்கப் பட்டிருக்கும் மியூசியத்திலுள்ள டயானா சிலையருகில் நின்று படமும் எடுத்துக் கொண் டேன். என்றாலும் விபத்து நடந்த அந்த இட மும் அந்தச் சூழலும்தான் என் கண்முன்னே இன்னமும் நிற்கிறது. ⬤

தொகுப்பு : **ஸ்ரீநிவாசன்**



# 'விடுகதை'யின்

அதீத உணர்வுகள் அல்லது அசாதாரண உணர்வுகள். இதுதான் இந்த வாரம் நாம் அலசப் போகிற விஷயம்.

கோபம், வெறுப்பு, சந்தோஷம் போன்ற உணர்வுகளெல்லாம் அங்கிங்கெனாதபடி எல்லோருக்குமே எழுகிற உணர்வுகள்தாம். ஆனால், இந்த அதீத உணர்வுகள் அப்படியல்ல. வெகு சிலருக்கு மட்டும் அபூர்வமாக எழக்கூடிய விஷயம்.

உதாரணத்துக்கு 'விடுகதை' திரைப்படத்தை எடுத்துக் கொள்வோம். அதில் வரும் கதாநாயகனான பிரகாஷ்ராஜுக்கு நாற்பது பிளஸ் வயது. நாயகி நீனாவுக்குப் பதினெட்டு வயது. இந்தப் பதினெட்டு வயதுப் பெண் நாற்பது பிளஸ் வயதுடைய ஒருவரைக் காதலிக்கிறாள் என்பது சாதாரண விஷயமல்ல. அசாதாரணமானது. இந்தப் பெண்ணுக்குள் இருக்கிற அதீத உணர்வுகள்தாம் அந்த அசாதாரண விஷயத்தைச் செய்யத் தூண்டுகிறன்றன.

ஓர் அரசியல் தலைவருக்காகத் தொண்டர்களில் சிலர் தீக்குளிப்பதும் இந்த அதீத உணர்வுகள் காரணமாகத்தான். எப்படி வருகிறது இந்த அதீத உணர்வுகள்?

இதற்கான அடிப்படைக் காரணம், எந்த வகையிலாவது பிறருடைய கவனத்தைத் தன் பக்கம் திருப்ப வேண்டும் என்கிற எண்ணம்தான். ஒரு தலைவனுக்காகத் தொண்டன் ஒருவன் தீக்குளிக்கிறபோது, அந்தத் தலைவனைப் பற்றிப் பேசுகிற யாரும் அந்தத் தொண்டனின் செயல்பற்றியும் பேசுகிறார்கள். 'அடேயப்பா! தலைவன் மேல் அந்தத் தொண்டனுக்குத்தான் எப்படிப் பட்டதொரு பற்று! கொஞ்சம் கூட யோசிக்காமல் தீக்குளித்து விட்டானே.... தொண்டன்னா அப்படித்தான் இருக்கணும்...' என்றெல்லாம் பேசுகிறபோது, அதைக் கேட்கிற வேறு சில தொண்டர்களுக்குள் இருக்கிற அதீத உணர்வுகளும் தூண்டப்படுகின்றன. 'ஓ! இப்படிச் செய்தால் எல்லோரும் நம்மைப் பற்றியே பேசுவார்கள். நம் தலைவர் கூட நமது செயலைப் பற்றிப் பேசுவார்' என்கிற எண்ணம் மனத்தில் ஆழமாகப் பதிந்து விடுகிறது. அப்படிப் பதிகிற எண்ணம் அவனுடைய அதீத உணர்வுகளைத் தூண்டி விட்டு

விடுகிறது. விளைவு? முன்பின் யோசிக்காமல் தானும் தீக்குளிக்கிறான்!

மீண்டும் விடுகதை படத்துக்கே வருவோம். உளவியல் ரீதியாகப் பார்த்தால் வளரும் ஒரு பெண் குழந்தை தந்தையின் மீது ஒருவித நம்பிக்கையை வளர்த்துக் கொண்டு விடுகிறது. ஆண் குழந்தையென்றால் அம்மாவிடம் ஒட்டிக் கொள்கிறது. முதல் ஐந்து வருடங்களிலேயே இந்த ஈர்ப்பு உண்டாகி விடுகிறது!

வளர்ந்த பிறகு, அம்மாவின் நடையுடை பாவனைகள் பெண்ணுக்கும் அப்பாவின் நடையுடை பாவனைகள் பிள்ளைக்கும் வரும். அதாவது அவர்கள் எடுத்துக் கொள்வார்கள். 'அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்காம்பா' என்று பிறர் கூறுவதில் - தனக்கு ஓர் அங்கீகாரம் கிடைப்பதில் மகிழ்ச்சியடைகிறான் பிள்ளை. 'அம்மாவை உரிச்க வெச்ச மாதிரியே பொண்

# விடை என்ன?

ணும் இருக்காப்பா!' என்று பிறர் சொல்வதில், பெண்ணும் தனக்கு ஓர் அங்கீகாரம் கிடைப்பதால் சந்தோஷப்படுகிறாள்.

என்றாலும் கூட அம்மாவிடம் இல்லாத ஒரு பாதுகாப்பு உணர்வை ஒரு பெண் தந்தையிடம் இருப்பதாகவே உணர்கிறாள். எனவே, எந்தப் பிரச்னையானாலும் அப்பா இருக்கும் போது என்ன கவலை என்கிற உணர்வுதான் இவர்களிடம் மேலோங்கியிருக்கும். இதற்கு எலக்ட்ரா காம்ப்ளெக்ஸ் என்று பெயர்.

இந்த நிலையில், அப்பாவின் அகால மரணம் போன்ற அசாதாரண சூழ்நிலைகளில் அப்பாவின் பாதுகாப்பு உணர்வு கைநழுவிப் போகிறபோது, அவர்களிடம் பலத்த ஏமாற்றம் வந்துவிடும். அதை வேறு யாரிடமாவது தேட ஆரம்பிக்கிறாள்.

திருமணத்தின் மூலம் கிடைக்கிற கணவன் என்கிற உறவு கூடப் பாதுகாப்பானதுதான் என்றாலும் அது அப்பாவின் பாதுகாப்புக்கு ஈடாகாது என்கிற எண்ணம். விளைவு? தன் மேலும் தன் குடும்பத்தின் மேலும் அக்கறையுள்ள - அப்பாவின் வயதிலுள்ள ஒருவரின் மேல் அவளுக்கு ஒருவித ஈர்ப்பு வந்து விடுகிறது. அந்த நபரிடம் தனது அப்பா விடமிருந்த முழு பாதுகாப்பு உணர் வையும் தேடவும் காணவும் ஆரம்பித்து விடுகிறாள்!

ஒரு பெண்ணுக்கு ஓர் ஆணிடம் - அவன் எந்த வயதுடையவனாக இருந்தாலும் சரி, முழுமையானதொரு பாதுகாப்பு உணர்வு வந்து விட்டால், அவனைத் திருமணம் செய்து கொள்வதிலோ அல்லது உறவு வைத்துக் கொள்வதிலோ எந்தவிதமான குற்ற உணர்வும் ஏற்படுவதில்லை. சொல்லப் போனால் இது போன்றதொரு பொருந்தாத் திருமணம் பற்றிப் பிறர் பேசினாலும் கூட அதன் மூலம்தான் பேசப்படுகிறோம் என்கிற சந்தோஷ உணர்வுதான் அடிமனத்தில் இருக்குமே தவிர குற்ற உணர்வு ஏற்படுவதில்லை.

எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தில் இப்படித்தான் நடந்தது. அந்த டீன்-ஏஜ் பெண் இப்படியொருவரிடம் ஈர்ப்புக் காட்டினாள். ஆனால் அந்த ஆண் அவளுடைய பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அந்தப் பெண்ணின் பலவீனமான மன நிலையைப் புரிந்து கொண்டு ஒதுங்கிப் போனார். ஆனாலும் 'உன் மீதும் உன் குடும்பத்தின் மீதும் எனக்கு அக்கறை உண்டு!' என்பதைக் காட்டுகிறவிதமாக அடிக்கடி போன் செய்தார். தவிர்க்க இயலாத சூழ்நிலையில் நேரில் வந்தபோதும் அந்தப் பெண்ணிடம் அனாவசியப் பேச்சுகளைத் தவிர்த்தார்.

இந்த நிலையில் நான்கைந்து வருடங்கள் கழிய, அனுபவமும் அறிவும் வெளியுலகத் தொடர்பும் பெறப் பெற, அந்தப் பெண்ணும் இயல்பான நிலையை அடைந்தாள். பெரியவர்கள் பார்த்துத் தேர்ந்தெடுத்த ஒருத்தனையே மணந்து கொண்டு சந்தோஷமாக வாழ ஆரம்பித்தாள்.

இதற்கு நேர்மாறான ஆண்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அந்தப் பெண் மாதிரியானவர்களின் அணுகுமுறையைச் சிறிதளவும் குற்ற உணர்வு இல்லாமல் பயன்படுத்திக் கொள்வார்கள். சமூக அளவுகோல்களையும் கட்டுப்பாடுகளையும் பற்றிக் கவலைப்படாமல் பிறரின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் சந்தோஷப்படுவார்கள்; பெருமைப்படுவார்கள். 'விடுகதை'யில் இதுதான் நடந்திருக்கிறது.

ஆனால் ஒன்று : அறிவைப் புறக்கணித்து விட்டுச் சந்தோஷம் காணுகிற கட்டுப்பாடற்ற மனம், சமூகத்துக்கு நல்லதல்ல. அது சமூக விபரீதங்களுக்குத்தான் வழிகாட்டும். ●

டாக்டர். எஸ். விஜயகுமார்

# நடக்குமென்பார், நடக்கும்!

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

டேக்-ஆஃப் கொஞ்சம் இடைஞ்சலா இருந்தாலும் சீக்கிரம் பிக் அப் ஆகி, சும்மா ஜம்போஜெட் மாதிரி ஸ்மூத்தா வேகமெடுக்கற வாரம் சார்! கை நிறையக் காசு, மனசு நிறைய சந்தோஷம் நிக்கறாப் போல சம்பவங்கள் நடக்கும். வேறென்ன வேணும்? வியாபாரிகளுக்கும் பெண்களுக்கும் முன்னேற்றமான வாரம். சில நீண்டநாள் ஆசைகளை இப்ப நிறைவேத்திக்கலாம். ஆபீஸ்ல வேலைப் பளு ஜாஸ்தியாத்தான் இருக்கும். சில புதிய நிர்வாக மாறுதல்களால, வெளியூர்ப் பயணமோ, இடமாறுதலோ சிலருக்கு இருக்கலாம். சின்னச் சின்ன சண்டைகள், மனஸ்தாபங்களைத் தவிர்த்தால் வீட்டுல மகிழ்ச்சிக்குக் குறைவு இருக்காது!

**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வெள்ளிக்கிழமை வரைக்கும் கிரகங்களெல்லாம் உங்களுக்கு சாதகமா இருக்குது. மகான்கள் தரிசனம் கிடைக்கலாம். இசைத் துறைல இருக்கறவங்களுக்கு செழிப்பான சமயம். புதிய வாய்ப்புகள் கதவையோ, ஜன்னலையோ வந்து தட்டும். ஆனா, சனிக்கிழமைக்கப்புறம் கொஞ்சம் நிலைமை சரியில்லாம போகலாம். பிரயாணங்களின் போது, கவனமா இருக்கணும். பிக்பாக்கெட், சிறு விபத்துக்கான சாத்தியங்கள் இருக்குது. அதே மாதிரி உடல் நலன் சம்பந்தமாகவும் பிரச்னைகள் வரலாம். லேசா ஜல்ப், ஜுரம் இந்த மாதிரி எதாச்சும் வரலாம்!

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பிரமாதமான நேரம். ஏதாவது புதுசா காரியம் தொடங்கற யோசனை இருந்தா, இப்ப ஆரம்பிக்கலாம். அரசியல்வாதிகளுக்கும் கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக் சம்பந்தமான தொழில்ல இருக்கறவங்களுக்கும் மிக ஆதாயமான கால கட்டம். வெளி நாட்டுலயிருந்து யாராவது நண்பர்கள், எதிர்பாராத விதமா உதவி பண்ணுவாங்க. அது, நீங்க வெளிநாடு போக ஏற்பாடு செய்யற விதமாகவும் இருக்கலாம்! நடுவுல சின்ன ஊடல்கள் வரும். அதையும் விட்டுக் கொடுக்கற பக்குவத்தை வளர்த்துக்கிட்டீங்கன்னா, பிரச்னை இல்லை. ஷேர் இன்ட்ரஸ்ட் உள்ளவங்க கொஞ்சம் கவனமா செயல்படணும். லாபத்துக்கான வாய்ப்பு 25% தான் இருக்கும். குடும்பத்துல சில விசேஷங்கள் வரப்போவுது. அதனால செலவும்!

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கல்யாணத்துக்குக் காத்துட்டிருக்கற இளவயசுப் பொண்ணுங்களுக்கு டும்டும்க்கான ஏற்பாடுகள் ஒர்க் அவுட் ஆகற வாரம் இது. கலர் கலரா கனவு கண்டுட்டு இருங்க! பொண்ணுங்க மட்டும் இல்லை. சினிமா, ராணுவம், எழுத்துத் துறைல இருக்கறவங்க, காணுற கனவு கூட இந்த வாரம் நனவாகப் போவுது! ஆனா ஒண்ணு, கனவு கண்டுட்டே இருந்து மத்த விஷயங்களை கவனிக்காம விட்டுடாதீங்க. குறிப்பா இந்த வாரம் சிலருக்கு வயிற்று உபாதைகள் வரலாம். கண்டதைத் தின்னு, உடம்பைக் கெடுத்துக்காதீங்க! கொடுக்கல் வாங்கல் பிஸினஸ் வேணாம்! ஏமாற்றங்களுக்கு சான்ஸ் இருக்குது! கவனமா இருங்க.



**மீன ராசிக் காரரான இசையமைப்பாளர் தேவாவுக்கு வளமான வாரம் இது! புதிய ஒப்பந்தங்கள் நடக்கும்! செயல்திறனால புகழ் ஓஹோன்னு உயருமாம்! (போனி எம் ப்ரோக்ராமுக்கு ஏன் வரலை தேவா சார்?)**

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வீட்டுல விசேஷங்க! உங்க வீட்டுலதான். சொந்தக்காரங்க நண்பர்கள் நிறையப் பேர் வரு

வாங்க. ஜாலியா பொழுது போவும். ஆனா, வாயைக் குடுத்து, வம்பை விலைக்கு வாங் கிக்காதீங்க. சில பேருக்கு ஃபிளாட் அல்லது நிலம் வாங்கற யோகம் தெரியுது. இன்னும் சில பேருக்கு டிரான்ஸ்ஃபர் யோகம்! வாரக் கடை சில மணக்க மகிழ்ச்சி தர்றாப்பல ஏதாவது ஒரு சம்பவம் நடக்கும். அது ரொம்ப நாளைக்கு மறக்க முடியாத விஷயமா அமையும் பாருங்க!

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கணிசமான கையிருப்பு உயர்வு பார்ப்பீங்க! உங்களுக்கே ஆச்சர்யமாகக் கூட இருக்கலாம். அப்படியொரு பணப்புழக்கம் இந்த வாரம். காரணம் என்னன்னா, செலவு பிடியில நிக் காது! செலவு ஏற ஏற, வரவும் கூடற டைம் இது. கலைத்துறைல இருக்கறவங்களுக்குப் புதிய வாய்ப்புகள், நிறைய புகழ், பாராட்டு மழைதான்! நீண்ட நாள் குழந்தை பிறக்காத வங்கள்ல சிலருக்கு இப்ப அதுக்கான சமயம் கூடிவரும். பசங்க கொஞ்சம் கூடுதல் கவனம் காட்டிப் படிச்சாத்தான் தேற முடியும்! ஊர் சுத்தற பிஸினஸ் வேணாம்!



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

தைரியத்தோட, துணிஞ்சி எந்தக் காரியத் தையும் செஞ்சீங்கன்னா பலன் நிச்சயம் உண்டு. அதை விட்டுட்டு, பயந்து பயந்து ஒதுங் கினீங்கன்னா, வாய்ப்பு அடுத்தவங்களுக்குப் போயிடும். இந்த வாரம் உங்களுக்குச் சவாலா சில விஷயங்கள் முன்ன நிக்கும். சமாளிச்சிட் டீங்கன்னா, வாரக் கடைசில புகழும் பெருமும் ஓஹோன்னு இருக்கும்! எதிர்பாராத செலவுகள் கொஞ்சம் இருக்கத்தான் செய்யும். கலங்கா தீங்க. பின்னால டபுளா திரும்பிவரும் போது குஷியில குதிக்கப் போறதும் நீங்கதானே?



**விருச்சிகம்** : *(விசாகம் 4- பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பதற்றத்தோட ஆரம்பிக்கப் போற வாரம். நிதானமில்லாம எதையும் குழப்பி, சிக்கல் பண்ணி, முழி பிதுங்கி நிப்பீங்க! அவசரபுத்தி வேணாமே? எதுக்குச் சொல்றேன்னா, உங்கள்ல சிலருக்கு இந்த வாரம் அதிர்ஷ்டமான வாய்ப் புகள் வந்து கதவைத் தட்டப் போவுது. உங்க அவசர புத்தியால அதைக் கெடுத்துக்க வேணாம் பாருங்க! கொடுக்கல் வாங்கல், ஷேர், ஸ்பெகுலேஷன் சமாசாரங்களில் கவனம்! வாரக் கடைசில சிலருக்கு உடல் நலன் பாதிக் கப்படலாம். கவனம், கவனம்!



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க வாழ்க்கையில் ஒரு சில முக்கியமான சம்பவங்கள் இப்ப நடக்கப் போவுது. உங்க மதிப்பும் கௌரவமும் கணிசமா உயரும். எந்த விஷயத்திலும் உதவி செய்ய நண்பர் கள், தோள்கொடுக்கும் அலுவலக ஊழியர்கள், அன்பு காட்டும் மனைவி... கொஞ்ச நாளைக்கு நீங்கதான் ராஜா போங்க! தனக்கும் தன் குடும்பத்துக் கும் பெருமை தேடித் தராப்பல இந்த வாரம் பெண்கள் சில காரியங்கள் செய்வாங்க. அலைச்சல், அசதி - ரெண் டும்தான் இந்த வாரம் குறைன்னு சொல்லக் கூடிய விஷயங்கள்.

**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

11ல் இருக்கற கிரக பலத்தால, ஆரம்பத்துல சில சுப பலன்கள் எதிர் பார்க்கலாம். வியாபார வளர்ச்சி, தாரான பணப் புழக்கம், காதல் அனு பவங்கள், அதிர்ஷ்ட வாய்ப்புகள் - பர வலாவே நல்லா அமையும். பேச்சுல நிதானம் முக்கியம். அவசரக் காரியம் ஆவாது! சிலருக்குப் புனிதப் பயணங் கள் அமையலாம். தெய்வ வழிபாட்டால மன அமைதிக்கும் பங்கம் வராது!

# அக்னிசர்மா பக்கம்

## டிசம்பர் 3 முதல் 9 வரை



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

இது வரைக்கும் இருந்து வந்த எதிர்ப்புகள், பிரச்னைகள், கஷ்டங்கள் எல்லாம் விலக ஆரம்பிச்சாச்சுங்க. உங்க நல்லகாலம் தொடங்கியாச்சு. எதிலும் வெற்றி, வாக்கு சாதுர்யம், செயல்திறன் சிறப்புன்னு கலக்கப் போறீங்க. விட்டுக் கொடுக்கற மனப்பக்குவத்தை மட்டும் வளர்த்துக்கங்க. அப்புறம் ஓஹோதான்! பெண்களுக்கு விசேஷமான சில சாதக பலன்கள் நடக்கப் போவுது. அது, புதிய பொருள் சேர்க்கையாவோ, உல் லாசப் பயணமாகவோ இருக்கலாம்!



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

புத்துணர்ச்சியும், தன்னம்பிக்கை யும் கொப்பளிக்க காரியம் செய்யும் உங்களுக்கு, தற்சமயம் தோல்வி வாச னையே இல்லை! எடுத்த காரியம் யாவிலும் வெற்றி! வீட்டுல சுப காரி யங்கள், புதிய (உபயோகமான) ஒப்பந் தங்கள், வெளியூர் பயணங்கள், தாராளப் பணப் புழக்கம்... அப்புறம் என்ன? புகுந்து விளையாடுங்க!



நம் பாரம்பரியம் மிக்க இட்லி, சாம்பாரையும் மசால் தோசையையும் புறமுதுகிட்டு ஓடவைக்க ஒரு புது உணவு ஐட்டம் வந்துவிட்டது. அதுதான் Pizza. உச்சரிப்பு பிட்ஸா!

என்ன நம்பவில்லையா?

அடையாறில் உள்ள பிட்ஸா கார்னரில் வந்து பாருங்கள். கூட்டம் நெரிகிறது. கண்களைச் சுழலவிட்டால், ஆச்சரியத்தில் விரிகின்றன. காரணம், தாத்தா பாட்டிகளும், பேரக் குழந்தைகளும் (நுனிநாக்கு ஆங்கிலம் பேசும் பேரக் குழந்தைகளோடு வருகிற பர்ஸ் பருத்த தாத்தா - பாட்டிகள்தான்! நம்மைப் போன்றவர்கள் எப்போதாவது ஒரு முறைதான் போய் வரலாம்!) ஒன்றாக வந்து பிட்ஸா சாப்பிடுகிறார்கள்! காதல் ஜோடிகள் கணவன் - மனைவி, நண்பர்கள் என்று யாருமே தன்னுடைய விதிவிலக்கில்லை. இப்படி மூன்று தலைமுறையினரைக் கவர்ந்திருக்கிறது பிட்ஸா. சென்னை நகரில் அடையாறு, நுங்கம்பாக்கம், புரசைவாக்கம் ஆகிய மூன்று கிளைகள் கொண்ட பிட்ஸா கார்னருடைய சராசரியான தினப்படி வியாபாரம் இப்போது ஒன்றரை லட்சம் ரூபாயைத் தொட்டு விட்டது.

ஏற்கெனவே, சென்னை நகரின் சில ஓட்டல்களில் இந்த பிட்ஸா கிடைக்கிறது என்றாலும், பிட்ஸா கார்னர் ஆரம்பித்த பிறகுதான், இதற்கு மவுசு கூடியிருக்கிறது. "இன்று இந்தியா முழுக்க அந்தந்த பிராந்திய உணவு வகையினை அடுத்து பெருமளவில் மக்களால் விரும்பப்படுவது சைனீஸ் உணவு வகைகள். இரண்டாமிடம் பிட்ஸாவுக்குத்தான்'' என்கிறார் பிட்ஸா கார்னர் உரிமையாளரான ஆன்டோனி. மேலும் மேற்கத்திய உணவு வகைகளிலேயே மிகவும் ஹெல்த்தியானது இந்த பிட்ஸாதானாம்!

# இட்லி சாம்பாருக்கு இத்தாலிய எதிரி!



'பிட்ஸா' என்பது என்ன?

இந்த இத்தாலிய உணவு ஐட்டம் பிட்ஸா எப்படி தயாரிக்கப்படுகிறது?

மைதா மாவும், கோதுமையும் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் கலந்து சப்பாத்தி மாவுபோல பிசையப் படுகிறது. பிறகு அதைத் தடித்த சப்பாத்தி போல் செய்து, பிரத்யேக ஸாஸால் மெழுகப்படுகிறது. (இதுவும் வழக்கமான தக்காளி ஸாஸ் இல்லை. வியாபார ரகசியம். ஒரே ஒரு தகவல். காதைக் கிட்டே



• பேஷ்.. பேஷ்... நல்லா இருக்கு!

• பர்ஸ் பருத்திருப்பது அவசியம்.



• சமீர் ஆனந்த், அன்டோனி

கொண்டு வாருங்கள். இதில் நூறுக்கும் அதிகமான சமாசாரங்கள் கலந்துள்ளன).

அதனையடுத்து தயாராய் துருவி வைக்கப்பட்டிருக்கும் 'சீஸ்' அந்த 'சப்பாத்தி' மேல் தூவப்படுகிறது. (இதுவும் இறக்கு மதி செய்யப்பட்ட உலகத் தரம் வாய்ந்த சீஸ்). அதனையடுத்து வெஜிடேரியன் பிட்ஸா என்றால் குடை மிளகாய், வெங்காயம், தக்காளி போன்றவையும், நான்வெஜ் என்றால் சிக்கன் இத்யாதிகளும் சீஸ் துருவலின் மேல் பரப்பப்பட்டு, தட்டோடு மின் அடுப்பினுள் அனுப்பி வைக்கப்படுகிறது.

அமெரிக்க இறக்குமதியான அந்த

அடுப்பின் வலதுபுறம் உட்புகுந்து சீராக நகர்ந்து, இடது புறமாக வெளியேற பத்துப் பதினைந்து நிமிடங்களாகின்றன.

அடுப்புக்குள்ளே தகிப்பின் அளவு சுமார் 450 டிகிரி சென்டிகிரேட். உச்சகட்ட வெப்பத்தில் சீஸ் உருகி, மேல் பரப்பில் வைக்கப்பட்ட ஐட்டங்களையும் அடிப்புறத்திலுள்ள மாவுப் பகுதியையும் இழைய வைக்கிறது.

இப்படி சுடச்சுட வரும் பிட்ஸா மீது உப்பு, மிளகுத்தூள், மிளகாய்த்தூள், தக்காளி சாஸ், என்று எது வேண்டுமானாலும் தூவிக் கலக்கலாம்.

கத்தி, ஃபோர்க் பயன்படுத்திச் சாப்பிடுவதைவிட, அட்டையில் பிட்ஸா சாப்பிடும் வனிதா போல, விரல்களால் எடுத்து, அப்படியே கடித்துச் சாப்பிடுவதுதான் சுலபம்.

பிட்ஸாவில் ஏகப்பட்ட வெரைடிகள். அறுபத்தைந்து ரூபாயில் துவங்கி, நூற்றைம்பது ரூபாய் வரை விலை. அசைவம் என்றால் தொண்ணூற்றைந்து ரூபாயில் துவங்கி 190 ரூபாய் வரை விலை. இரண்டு சைஸ்களில் பிட்ஸா தயாரிக்கப்படுகிறது. நாலு துண்டுகள் கொண்ட சிறு வட்ட வடிவம்; எட்டுத் துண்டுகள் போட்ட பெரிய வடிவம்.

"பிட்ஸாவை வீட்டிலேயே தயாரிக்க முடியுமா?"

"வீட்டிலேயே பிட்ஸா சாப்பிட வேண்டுமானால் ரொம்ப ஈசியான வழி ஒன்று இருக்கிறது. எங்களுக்கு டெலிபோன் செய்து, என்ன வகை பிட்ஸா வேண்டுமென்று ஆர்டர் கொடுத்து விட்டால் போதும், ஒரேயொரு பிட்ஸாவானாலும் கூட வீடு தேடி வந்து டெலிவரி செய்து விடுவோம். அதை அப்போதே சாப்பிட்டாலும் சாப்பிடலாம். இல்லை, ஃபிரிஜ்ஜில் வைத்திருந்து அடுத்த நாளும் சாப்பிடலாம். டேஸ்டில் சிறிதளவும் மாற்றம் இருக்காது. ஃபிரஷ்ஷாக உள்ளது போலவே இருக்கும்!" என்கிறார் நிறுவனத்தின் இயக்குனர் சமீர் ஆனந்த்.

"வீட்டிலேயே செய்ய முடியாதா என்ன?"

"செய்யலாம். ஆனால் எங்கள் டேஸ்ட் வராது!"

**— கௌதம்**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **யோகா**

# சிட்னி ஒலிம்பிக்ஸ் : இப்போதே சர்ச்சை!

**அ**டுத்த ஒலிம்பிக்ஸ் (2000 ஆம் ஆண்டு) தங்கள் நாட்டில்தான் நடைபெற வேண்டும் என்பதில் சீனா, ஆஸ்திரேலியா இரண்டுமே தீவிரமாக இருந்தன. சீனாவில் மனித உரிமைகளுக்குப் போதிய முக்கியத்துவம் தரப்படுவதில்லை என்பதை முக்கிய காரணமாகக் காட்டி, அந்த வாய்ப்பை ஆஸ்திரேலியாவுக்கே அளித்தது சர்வதேச ஒலிம்பிக் குழு.

ஆஸ்திரேலிய பழங்குடியினரிடமிருந்து, "இங்கு என்ன வாழுகிறது? இன்னும்தான் நிறவெறியும், இனவெறியும் நிலவுகிறது" என்று அப்போதே முணுமுணுப்பு எழுந்தது. போதாக் குறைக்கு ஒலிம்பிக்ஸுக்கான பெரும்பாலான கட்டுமானப் பணிகள் பழங்குடியினர் வசிக்கும் இடங்களிலேயே நடைபெறுவதால், அவர்களது எரிச்சல் அதிகமாகியிருக்கிறது.

மனித உரிமைக்குக் குரல் கொடுப்பதில் முன்னணியில் உள்ள அமெரிக்கரான எர்விங் என்பவர் (இவர் சர்வதேச கறுப்பர்கள் தன்னாட்சி அமைப்பின் தலைவரும் கூட) சமீபத்தில் இன்டர்னெட் மூலமாக ஆஸ்திரேலிய அரசின் 'இரட்டை வேடத்தை'ச் சாடியிருக்கிறார்.

உள்ளூர் பழங்குடி இனத்தவரோ, "உலகெங்கிலும் உள்ள 'கறுப்பு'த் தோழர்களே, சிட்னி ஒலிம்பிக்ஸில் கலந்து கொள்ளவோ பார்வையாளராகவோ வர வேண்டாம். இங்கு நடக்கும் அட்டூழியங்களை உங்கள் நாட்டு மாதாகோயில், கல்லூரி, மனமகிழ் மன்றம் ஆகிய எல்லா இடங்களிலும் எடுத்துச் சொல்லுங்கள்" என்றும் வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள்.

**— குல்லு**





# குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு தெய்விக மூலிகை மருத்துவம்

குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு முக்கிய காரணம் நாம் உண்ணும் உணவுகளில் அதிகமாக ரசாயனப் பொருட்கள் கலந்திருப்பதாலும், பலவித நோய்களுக்காக அவ்வப்போது வீரியமிக்க ரசாயன மாத்திரைகளை உட்கொள்வதாலும், அடிக்கடி மாமிச உணவுகள் உண்பதாலும், அதிகமான கவலை கொள்ளுதல், பலருடன் உடலுறவு கொள்ளுதல் போன்றவைகளால் கர்ப்பப்பையில் புண் ஏற்படுகின்றது இதனால் கர்ப்பப்பையில் உள்ள சுரப்பிகள் நன்றாக இயங்காது. மேலும் அதன் சுரப்பு நீரும் திறன் மிக்கதாக இருக்காது தவிர கர்ப்பப்பையும் நன்றாக சுருங்கி விரியும் தன்மையினை இழந்துவிட்டால் முறையான மாதவிடாய் இருக்காது. வெள்ளைப்படுதலும் தோன்றும். வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறுகள், மலட்டுத்தன்மை உள்ள தாய்க்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் கடினம்.

## கருத்தரிக்காமைக்கு காரணம்

பெண்களுக்கு உற்பத்தியாகும் கரு முட்டைகள் சரியான முதிர்ச்சியும், வளர்ச்சியும் இல்லாதிருத்தல், கருப்பையின் குழாய்கள் அடைப்பு அல்லது சுருங்கி இருத்தல், முட்டையகத்தில் (ஓவரி) குறைபாடு, கருப்பை வளர்ச்சியின்மை, கர்ப்பப்பை புண், ஆண்களின் விந்தணு எண்ணிக்கையில் குறைவாகவும், தகுந்த உயிரூட்டத்துடன் இல்லாமல் இருத்தல், ஆண்மைக் குறைவு, சரியான நேரம் அறிந்து உடலுறவு கொள்ளாமை, அடிக்கடி உடலுறவு கொள்ளுவதால் முதிர்ச்சி இல்லாத விந்தணு வெளியாகி உயிர்ப்பிக்கும் சக்தி இல்லாதிருத்தல் ஆகியன கருத்தரிக்காமைக்கு காரணம் ஆகும்.

## தெய்விக மூலிகை வைத்தியம்

விநாயகருக்குரிய அருகம்புல், சக்திக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், பிரம்மாவுக்குரிய அத்தி, கங்கைக்குரிய மாவிலை மற்றும் அற்புத மூலிகை மருத்துவ குணம் கொண்ட அரசிலை, ஆலிலை, நாவல் இலை, முருங்கையிலை, ஓரிலை தாமரை, கீழாநெல்லி ஆகியவைகளைப் பறித்து வந்து வெயிலில் உலர்த்தி பொடிசெய்து சலித்து பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும். இதனை சுமார் ஆறுமாதம் வரை பின்பற்றவும். இளம் தம்பதிகளுக்கு மிக விரைவிலும், மற்றவர்களுக்கு சற்றுத் தாமதமாகவும் கண்டிப்பாக பலன் தெரியும். இத்தகைய மூலிகைகளினால் வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை நீங்கி கர்ப்பப்பை நன்கு வளர்ச்சி அடையும். விந்தணு, சினைமுட்டைகள் நன்கு முதிர்ச்சி அடைந்ததாகவும், வளர்ந்ததாகவும் இருக்கும். மேலும் எலும்புகள், நரம்புகள் பலம் பெற்று ஆண்மைக் குறைவும் மறையும்.

வேப்பிலை, வில்வம், கீழாநெல்லி போன்றன எதிர்ப்பு சக்தியையும், ரத்தம் சுத்தம் அடையவும், அத்தியிலை, நாவல், முருங்கை, ஓரிலை தாமரை போன்றவை நரம்பு மண்டலம் நன்கு இயங்கவும், அரசன், ஆலிலை, மாவிலை போன்றவை கருத்தரிக்க உதவும் உயிர் அணுக்கள், கருமுட்டை ஆகியவற்றின் எண்ணிக்கை அளவு, வீரியம் ஆகியவற்றை அதிகப்படுத்தவும் உதவும். இத்தகைய மகிமையின் காரணமாகவே திருமண சடங்குகளின்போது இதன் குச்சிகளை ஓமம் வளர்ப்பார்கள். அப்போது அதன் புகைகளை தம்பதிகள் இருவரும் சுவாசிப்பதன் மூலம் மேற்கூறிய பலனை அடைவார்கள் என்பது உண்மை.

## உணவு முறைகள்

தம்பதிகள் இருவரும் தினம் ஏதேனும் ஒருவேளை வேகவைக்காத பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழசீர்கள், சாலட்கள் போன்றவற்றையே உணவாக உட்கொள்ள வேண்டும். கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், பீர்க்காய், வாழை, கொய்யா, ஆப்பிள், பேரீச்சை, திராட்சை, மாதுளை, தர்பூசணி, பாதாம், முந்திரி, இளநீர், கரும்புச்சாறு, தேங்காய், வெங்காயம், கறிவேப்பிலை, கொத்தமல்லி போன்றவைகளில் இருந்து ஏதேனும் இரண்டு (அ) மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளலாம். பின்னர் மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உட்கொள்ள வேண்டும். இதில் கேழ்வரகு, கோதுமை, கம்பு, மக்காச்சோளம் போன்ற தானியங்களையும் அடிக்கடி சேர்த்துக்கொள்வது நல்லது. நிலக்கடலை, மூக்குக்கடலை, கொள்ளு போன்றவற்றையும் மாலை வேளைகளில் சுண்டல் செய்து உட்கொள்ளலாம். கிடைத்தால் வெள்ளாட்டுப்பால் சிறிது தண்ணீர் கலந்தும் தம்பதிகள் குடிக்கலாம்.

**தவிர்க்க வேண்டியது :** புகைத்தல், மதுவகைகள், மாமிச உணவுகள், சர்க்கரை கலந்த இனிப்புகள், ரசாயனம் கலந்த உணவுகள், குளிர்பானங்கள், எண்ணெயில் செய்த பலகாரம், அகத்திக்கீரை, பாகற்காய், பப்பாளி முதலியவை தவிர்க்கவும். இவர்கள் வாரம் ஒருநாள் பகல் ஒருவேளை (சமைத்த) உணவை தவிர்க்கவும். இரவு உணவை 7 மணிக்குள் முடித்தல் வேண்டும்.

**உடற்பயிற்சிகள் :** நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், நின்ற இடத்தில் ஓடுதல், குதித்தல், கயிறாட்டம், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல், மூச்சுப்பயிற்சி, தியானம் போன்றவற்றை தினம் 20 நிமிடம் காலை மாலை செய்தல் நல்லது.




*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**தலைமை முகவரி** : Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.ராமநாதன், S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

**சென்னை கிளை** : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ : 6424285, 6427638


**குறிப்பு:** சென்னை, வேலூர், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஓசூர், கிருஷ்ணகிரி, சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், ஆம்பூர், காஞ்சிபுரம், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 22 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.55/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.45/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

# தேடினால் யுரேகா

தீவிர சிகிச்சைப் பகுதியில் படுத்திருந்தார் பிரபல தொழிலதிபர் ராமானந்த். கூரிய கத்தியை ராமானந்தின் கழுத்தில் இறக்கியிருந்தான் குற்றவாளி.

'யார் குற்றவாளி?' பிடிபடவில்லை.

"அண்ணனோட அலறல் மட்டும் அந்த நடுராத்திரியிலே கேட்டுச்சு. மாடிக்கு ஓடிப் போய்ப் பார்த்தா அவர் ரத்த வெள்ளத்திலே கிடக்கிறாரு. அறைவாசலிலே வாட்ச்மேன் ரத்னம் துடிச்சிக்கிட்டிருக்கான். அவன் தோளிலேயும் ஒரு போடு போட்டிருக்கான் அந்தக் கொலைகாரன்'' என்றாள் கேவல்களுக்கிடையே கலோசனை – ராமானந்தின் தங்கை. ராம், லக்ஷ்மண் என்ற இரட்டையர்களின் தாய். ராம் மட்டும் சம்பவம் நடந்த அன்று அவளுடன் இருக்க, லக்ஷ்மண் தன் தந்தையோடு ஊரில் தங்கிவிட்டான்.

கட்டுப் போட்டிருந்த தன் வலது தோளைப் பார்த்தபடியே கதறத் தொடங்கினான் ரத்னம். "அந்தப் பாவி பின்பக்கமாக ஏறியிருக்கணும் சார். மாடி வராண்டாவிலே தயங்கி ஒளிந்து ஒரு உருவம் போவதைக் கவனித்ததும் நான் வேகமாகத்தான் மாடியேறினேன். ஆனால் நான் ஐயாவின் அறைக்குள்ளே நுழைவதற்குள்ளே முதலாளியைத் தாக்கிட்டான் அந்தக் கொலைகாரன். தடியோடு அவன் மேலே வேகமாகப் பாய்ஞ்சேன். ஆனால் தன் கையிலே இருந்த கத்தியாலே என் வலது தோளிலே வேகமா ஒரு போடு போட்டுட்டான். எனக்குக் கண்ணே கிறுகிறுத்துப் போச்சு."

ராமானந்தின் மனைவி கிரிஜாவின் கண்கள் அழுது சிவந்திருந்தன. "அவர் பக்கத்திலேயே படுத்திருந்த எனக்கு அப்போதுதானா பாத்ரூம் போகத் தோணணும்! மாடி வராண்டாவின் மறுகோடியில்தான் பாத்ரூம். அங்கே போன ஓரிரு நிமிடத்திலேயே என் கணவரின் அலறல் தனியா பளிச்சுனு கேட்டுது. என்னாலே எதுவுமே செய்ய முடியாதபடி பாத்ரூமை வெளியில் தாழ்ப்பாள் போட்டுட்டுப் போய் நினைச்சதைச் சாதிச்சிருக்கான் அந்தச் சண்டாளன். என் கழுத்திலே தாலி நிலைக்குமான்னு இப்போ தெரியலியே..." அழத் தொடங்கினாள்.

"அழாதே அக்கா. உன் தாலிக்கு எந்த ஆபத்தும் வராது" என்று சமாதானப்படுத்தினான் சுகுமார். ராமானந்தின் மைத்துனன். புளி வியாபாரத்தில் சமீப காலமாக நஷ்டத்தை சந்தித்துக் கொண்டிருந்தவன். விபரீதம் நடந்த அன்று அவனும் அந்த வீட்டின் கீழ்ப்புற அறையொன்றில் தங்கியிருந்தான்.

ராமானந்தின் அறையில் ஓர் ஓரமாகப் படுத்தபடி ஊளையிட்டுக் கொண்டிருந்தது ரோஸி. சின்னப் பொமரேனியன். தன் முதலாளிக்கு ஏதோ பெரும் விபத்து என்பதை உணர்ந்து கொண்டிருந்தது போலும்!

தனிமையில் கிரிஜாவை மீண்டும் விசாரித்தார் இன்ஸ்பெக்டர். "நிச்சயமா தெரியுமா வீட்டிலே எந்தப் பொருளும் களவு போகலேன்னு?" திடீரென்று நினைவு வந்தவளாய் கிரிஜா தங்கள் அறையிலுள்ள ஓரிடத்தைச் சோதனை செய்தாள். "என் கணவர் இரண்டு நாட்களுக்கு முன்னே ஒரு சூட்கேஸ் வாங்கி வந்தார். அதைக் காணோம்" என்றாள்.

மேலும் விவரங்களைக் கேட்டுக் கொண்ட இன்ஸ்பெக்டர், வீட்டிலிருந்த அனைவரையும் வரவழைத்து, " காணாமல் போன அந்த சூட்கேஸை திருடன் இங்கேதான் ஒளித்து வைத்திருப்பான். அதனால் எல்லோரும் தேடிப் பாருங்கள்!" என்றார்.

## அருண் சரண்யா

அடுத்த அரை மணி நேரத்தில் குற்றவாளியைக் கண்டுபிடித்து விட்டார் இன்ஸ்பெக்டர். வரிசையாக விசாரித்ததில் தன் குற்றத்தை ஒத்துக் கொண்டான் ரத்னம்.

பத்திரிகையாளர் கூட்டத்தில் இன்ஸ்பெக்டர் விளக்கினார். "சம்பவம் நடந்த ராத்திரியில் ராமானந்தின் அலறலை மட்டும்தான் கேட்டதாக எல்லாரும் சொல்லியிருந்தாங்க. அதாவது ரோஸியின் குரைப்பைக் கேட்டதாக யாரும் சொல்லலே. ரோஸியைப் பொறுத்தவரை ராமானந்த் மட்டுமல்ல, தனக்குத் தினமும் உணவு கொண்டு வந்து வைக்கும் ரத்னமும் முதலாளிதானே. அதனால்தான் அவனை ஒரு எதிரியாக நினைத்து அது குரைக்கவில்லை. சூட்கேஸை சத்தம் போடாமல் எடுத்துக் கொண்ட ரத்னம் அறை வாசலை அடைந்தபோது ராமானந்த் விழித்துக் கொள்ள, கத்தியை அவர் கழுத்தில் இறக்கியிருக்கிறான். சந்தேகம் வராமலிருக்க தன் தோளிலும் வெட்டிக் கொண்டிருக்கிறான்."

"அது சரி, ரத்னம்தான் குற்றவாளி என்பதை எதை வச்சுக் கண்டுபிடிச்சீங்க?" என்று கேட்டார் ஒரு பத்திரிகையாளர்.

"தொலைந்த சூட்கேஸ் நீங்கள் நினைப்பது போல் அல்ல. சிகரெட் பெட்டி சைஸ்தான் அது. வெள்ளியில் ஆனது. உள்ளே முழுதும் வைரங்கள். இந்த விஷயத்தை ராமானந்த் தன் மனைவியிடம் கூறியபோது ரத்னம் கேட்டிருக்கிறான். நான் 'சூட்கேஸ்' என்று மட்டுமே குறிப்பிட்டதால் மற்றவர்கள் பொதுவாக சூட்கேஸ் இருக்கக் கூடிய இடங்களைத் தேட, ரத்னம் மட்டும் மேஜை டிராயரையெல்லாம் திறந்து பார்த்தான். அதாவது சூட்கேஸின் அளவு அவனுக்குத் தெரிந்திருக்கிறது என்பது அவனையும் அறியாமல் வெளிப்பட்டு விட்டது. தவிர மற்றவர்கள் வீட்டின் பல இடங்களைத் தேட, இவன் மட்டும் ஒரு குறிப்பிட்ட பகுதியை மட்டுமே 'தேடிக்' கொண்டிருந்தான். அதாவது தான் திருடிய பொருளை அங்கே எங்கோ ஒளித்து வைத்திருப்பதால், மற்றவர்கள் அந்தப் பகுதியில் தேடிவிடக் கூடாது என்பதில் குறியாக இருக்கிறான் என்பதும் விளங்கியது. அந்தப் பகுதியைப் பிறகு தீவிரமாகத் தேடியதில் 'சூட்கேஸ்' கிடைத்து விட்டது. போதாக்குறைக்கு ரத்னம் இடக்கைப் பழக்கம் உள்ளவன் என்பதும் தேடும்போது தெளிவாக வெளிப்பட்டது. காயம் அவனது வலது தோளில். எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்த போது விடை கிடைத்து விட்டது." ○



# தாக்கரேயின் மருமகள் தொடுத்த வழக்கு!

### மஹா பாவமா? ஐயோ பாவமா?

அண்மையில், கோபோலியில் கள்ளச் சாராயம் குடித்து விட்டு, ஸயான் ஆஸ்பத்திரியில் பரலோகத்துக்கு டிக்கெட் எடுத்த 26 நபர்களின் குடும்பத்துக்கு, மனோகர் ஜோஷி நஷ்டஈடு கொடுக்கப் போவதாக அறிவித்தாலும் அறிவித்தார், ஜூனியர் தாக்கரே தாக்குதலை ஆரம்பித்து விட்டார். 'நிதிப் பற்றாக்குறையால் ஏற்கெனவே ததிங்கிணத்தோம் போடுகையில், குடித்துச் செத்தவர்களின் குடும்பங்களுக்கெல்லாம் அள்ளிக் கொடுக்க இங்கே கொட்டியா கிடக்கிறது? மஹா பாவம்!' என முணுமுணுக்க ஆரம்



• தாக்கரே

பித்து விட்டார். ஆனால் ஜோஷியோ, 'குடிகாரர்களுக்கா கொடுக்கிறோம்? அவர்களை கட்டிக் கொண்டு அழும் பாவப்பட்டவர்களுக்கல்லவா உதவுகிறோம்? ஐயோ பாவம்!' என்கிறார்.

### சலிப்பால் விளைத்த சலிப்பு!

ஏற்கெனவே காங்கிரஸுக்கு 'ஸலைன்' ஏற்றும் நிலை! இந்த அழகில் ராகுல் காந்தி, சோனியாவிடம் 'ஓகே' பெற்று, தம்முடன் படிக்கும் யாரோ கொலம்பியா பெண்ணைக் காதல் மணம் புரிந்து கொண்டு லண்டனிலேயே 'செட்டில்' ஆகப் போவதாகவும், வீட்டுப் பிரச்னையால் விரக்தி அடைந்த பிரியங்கா வேறு தன் கணவருடன் ஐரோப்பா போய்விடப் போவதாகவும் செய்திகள் வர, சோனியாவும் குழந்தைகளின் அடிச்சுவட்டில் இந்தியாவைத் துறந்து விடுவாரோ என்ற பயம் பல அடிமட்டத் தொண்டர்களை பற்றிக் கொண்டுவிட்டது. அதனால் காங்கிரஸ் 'பூட்ட கேஸ்' என்ற நினைப்பில், சிவசேனையை நோக்கி பல காங்கிரஸ்



• ஜோஷி

காரர்கள் இங்கே படை எடுக்கத் துவங்கி விட்டனர். முதலில் இருகரம் நீட்டி வரவேற்ற தாக்கரே, இப்போது கைகளை பின்னுக் கிழுத்துக் கொண்டு விட்டார். இந்த நிலை நீடித்தால், சிவசேனை ஒரு மினி காங்கிரஸாகி விடுமோ என்ற கவலை ஒரு புறம்! 'தாவல்' காரர்களுக்கெல்லாம் பெரிய பதவிகளை தூக்கிக் கொடுத்துவிட்டு 'காவல்' காரர்களாகிய நமக்கு அல்வா கொடுக்கிறார் தாக்கரே என்று சாமானிய சேனைக்காரர்கள்

சலித்துக் கொள்வது மறுபுறம். அதனால், இனி சல்லடை போட்டு சலித்த பின்னரே கட்சி மாறிகளை ஏற்றுக் கொள்வோம்' என்று அறிவித்துவிட்டார்!

## "மகாநகர்" செய்திகள்

தாக்கரே குடும்பத்துக்கும் 'மகாநகர்' பத்திரிகைக்கும் தான் பத்துப் பொருத்தங்களாயிற்றே? "ஸ்மிதாவின் பாவ மன்னிப்பு", "மாதாடி தொழிலாளர்களின் வீடுகளை அபேஸ் பண்ணும் திட்டத்தில் ஸ்மிதா தோல்வி" போன்ற தலைப்புகளில் கட்டுரைகள் வெளியானது. இது எங்கள் குடும்பத்தாரைத் திட்டமிட்டே இழிவுபடுத்துவதற்காகத் திரிக்கப்பட்ட கட்டுக்கதைகள் என்று மருமகள் ஸ்மிதா தாக்கரே அந்தப் பத்திரிகையின் மீது கோடிகளுக்கு மான நஷ்ட வழக்குத் தொடுத்திருக்கிறார். "இவை கட்டுக்கதைகள் அல்ல, உண்மையான, கண்ணீர்க் கதைகள்!" என்கிறார் 'மகாநகர்' பத்திரிகையின் வழக்குரைஞர். டிசம்பரில் இந்த வழக்கு கோர்ட்டுக்கு வரும்போது, ஏனைய பத்திரிகைகளுக்கு 'ஸ்கூப்போ ஸ்கூப்'தான்.

## நாடகமே இந்த உலகம்

'இந்த சமூகத்தைத் திருத்தவே முடியாது' என விரக்தி அடைபவர்கள் ஒரு ரகம், 'முயன்று பார்ப்போமே, ஒரு சதவிகிதம் மாறினாலும் வெற்றிதான்' என்று முயற்சி செய்பவர்கள் 'போல் ஜமூரே' போன்ற ரகம். தெருத் தெருவாக நாடகங்களை அரங்கேற்றும் இந்தக் குழு, மும்பையில் வீதிநாடகங்களைப் பிரபலமாக்கிக் கொண்டிருக்கிறது. குழந்தைகளை வேலைக்கனுப்புவது, வரதட்சணைக் கொடுமை, கல்வியின் அவசியம், பெண்ணடிமைத்தனம் போன்ற ஜனரஞ்சகமான பிரச்னைகளை அலசுகிறார்கள். அண்மையில் இவர்களது நாடகம் நடந்து கொண்டிருந்த போது ஒரு பார்வையாளர் எழுந்து, 'இனிமேல் என் மகனை வேலைக்கு அனுப்பாமல் பள்ளிக்கு அனுப்புவேன்!' என்று சத்தியம் செய்ததும், பிறிதொருவர் "என் வீட்டுப் பெண்களை நான் மரியாதையாக நடத்துவேன்!" என வாக்குறுதியளித்ததும் இவர்களது வெற்றிக்குச் சில மாதிரிகள்.

## தரையில் இறங்காத விமானங்கள்

இப்போதெல்லாம் விமானத்தில் மும்பை வருபவர்களுக்கு ஓசியில் 'மும்பையைச் சுற்றும்' அதிர்ஷ்டம் அடிக்கிறது. ஏர் ட்ராஃபிக் கண்ட்ரோலர்கள் வேலை நிறுத்தத்தால் விமானங்களின் புறப்பாடு எக்கச்சக்க தாமதமாவது ஒரு பக்கம் இருக்க, இறங்குவதற்கு க்ளியரன்ஸ் கிடைக்கவும் யுக யுகாந்திரங்களாவதால், விமானங்கள் மும்பையைச் சுற்றிச் சுற்றி வட்டமடித்துக் கொண்டிருக்கும் அவலம். அதுவும் அண்மையில், சுற்றுலா சென்றுவிட்டு விமானத்தில் திரும்பிய பள்ளி மாணவர்களுக்காக, எப்போது விமானம் தரையிறங்குமோ என்று பெற்றோர்கள் அனுபவித்த அவஸ்தையை என்னென்று சொல்ல!

"கல்யாணத்துக் கப்புறம் நாம ஜாலியாக இருக்க முடியுமா ரவி?"
"அது எனக்கு அமையப் போகிற மனைவியையும்



உனக்கு அமையப்போகிற கணவனையும் பொறுத்து இருக்கு!"
– வி.எஸ். அனந்த்

## அதிர்ச்சியான அமைச்சர்

கலாச்சாரத் துறை அமைச்சர் பிரமோத் நாவல்கர், அண்மையில் லதா மங்கேஷ்கர் கௌரவிக்கப்பட்டபோது, அந்த இசைக் குயிலுக்கு, தங்கக் குயில் பதித்த தம்புராவை பரிசளிக்க வேண்டுமென்று திட்டமிட்டு, ஏற்பாடுகளையும் செய்தார். ஆனால்... 'மொமெண்டோ'வைப் பிரித்தவருக்கு அதிர்ச்சி. இவர் வடிவமைத்த அமைப்பில் அது இல்லை என்பதோடு, குயிலும் தங்கத்தில் இல்லை! என்ன காரணம்? தெரியாமல் தவித்துக் கொண்டிருக்கிறார் அமைச்சர்.

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# 35 குறையொ

'சாத்தம் பாக வதஸ்யான்னம்' என்று ஆரம்பிக்கிற சுலோகம் மூலமாக பகவான் துரியோதனனுக்கு உணர்த்துகிறான்.

'என் திருவடியிலே உனக்கு பக்தி இல்லை. உன் வீட்டிலே வந்து எப்படியடா நான் சாப்பிடுவேன்..?' என்னிடம்தான் பக்தி யில்லையென்றால் என்



# ன்றுமில்லை

திருவடியைப் பற்றக் கூடியவர்களிடமாவது பக்தி இருக்கிறதா உனக்கு..? அதுவும் இல்லை!

'விரோதிகளுடைய வீட்டிலே உணவு கொள்ளக் கூடாது என்பது சாஸ்திரம். நீ எனக்கு நேர் விரோதி இல்லாவிட்டாலும் என்னுடைய பக்தர்களான பாண்டவர்களை நீ துவேஷிக்கிறாய். ஆகையினாலே, அந்த பாகவத அபசாரத்தைப் பண்ணுவதனாலே நான் உன் கிரஹத்தில் சாப்பிடமாட்டேன்' என்கிறான் பரமாத்மா.

இதிலிருந்து, துரியோதனனுக்கு விஷ்ணு பத தியானம் இல்லை என்று ஏற்பட்டுப் போகிறது!

கீதையிலே பரமாத்மா சொல்கிறான்– 'நான் இந்த சாமான்ய வேஷத்திலே வந்ததால், என் பெருமை தெரியாமல் இருக்கிறார்கள்... மூடர்கள்!' என்று எச்சரிக்கிறான். உண்மையில் அவன் எல்லோருக்கும் மேலான, மேம்பட்ட பரமாத்மா அல்லவா... அத்தனை பெரியவன், இந்த உலகத்திலே அவதரித்து, எல்லாருக்கும் எட்டக் கூடியவனாய், எடுப்பார் கைப் பிள்ளையாக நின்று பேசுகிறான்! 'பீஷ்மாச்சார்யார் அணையும் நெருப்பு போலே இருக்கிறார்; அவரிடத்தில் விஷயத்தைக் கேள்' என்று சொல்லி அனைவரையும் கேட்க வைத்து, தானும் கேட்டு, ஓம் விஷ்ணுவே நம: என்கிற நாமத்தினுடைய பெருமையை வெளியிட்டானே... அதைக் காட்டிலும் வேறொன்று வேண்டுமா...?

அப்பேர்ப்பட்ட விஷ்ணுபத தியானம் நமக்கு சௌக்யத்தைக் கொடுக்கும் என்பதைத்தான் 'ஏழும் ஏழும் ஏழுமாய்' என்கிற வாக்கு விளக்குகிறது.

**'எ**ட்டும் மூன்றும் ஒன்றுமாகி நின்ற ஆதிதேவனே..' என்று முடிக்கிறார் திருமழிசை ஆழ்வார். அதை விளக்குவதற்கு முன்னால் கொஞ்சம் மட்டபல்லி க்ஷேத்ரம் குறித்துச் சொல்கிறேன். நரசிம்ஹ ஜெயந்தி தினத்திலே மட்டபல்லிக்கு வருவது என்று அத்தனை பேரும் மஞ்சள் துணியிலே காசு முடிந்து வைத்துச் சங்கல்பம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

கிருஷ்ணா நதி தீரத்திலே பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. மங்களகிரி, வேதாத்ரி, மட்டபல்லி, வாடபல்லி, கேதவனம்.

இவற்றுள் மட்டபல்லி என்பது வேதாத்ரி, வாடபல்லி-இரண்டுக்கும் நடுவிலே இருக்கிறது.

வேதாத்ரியில் இருப்பவன் யோகானந்த நரசிம்ஹன். இடுப்பிலே கத்தி வைத்துக் கொண்டிருக்கிறான் அவன். ஒரு தேர்ந்த surgeon சஸ்திர சிகிச்சை அளிப்பதுபோலே ஸமஸ்த ரோகங்களையும் நிவர்த்தி பண்ணுகிறான். பல அற்புதங்கள் அவன் சந்நிதியிலே நடந்திருக்கின்றன.

வாடபல்லியிலிருக்கிற நரசிம்ஹனுக்கு தீபாலயன் என்று ஒரு பெயர். அந்த க்ஷேத்திரத்தில் என்ன ஏற்றம் என்றால், எம்பெருமானின் நாசிக்கு நேராக ஒரு தீபம்; அவன் திருவடிக்கு நேரே ஒரு தீபம். கர்ப்பகிருஹத்திலோ துளி காற்று கிடையாது! உள்ளே போனால் உடம்பு அப்படியே வியர்த்துக் கொட்டும். அந்த இடத்தில் எல்லோரும் கவனித்தால் தெரியும்... பகவான் மூக்குக்கு நேரே இருக்கிற தீபஜ்வாலை மட்டும் ஆடிக் கொண்டே இருக்கும். அவன் திருவடியிலே இருக்கிற ஜ்வாலை ஆடவே ஆடாது; அப்படியே இருக்கும்! இது எதைக் குறிக்கிறது...?

நாம் நமது ஊரிலிருந்து கிளம்பி, அந்த க்ஷேத்திரத்துக்குப் போகிறோம். ஏகப்பட்ட சஞ்சலத்தோடு போகிறோம். மேலே ஆடுகிற தீபம் அந்த சஞ்சலத்தைக் குறிப்பாகக் காட்டுகிறது. அவன் திருவடியைப் போய் சேவித்ததும் சஞ்சலம் போய்விடுகிறது! அதைத்தான் திருவடியிலே ஆடாது அசையாது எரியும் தீபம் காட்டுகிறது.

இனிமேல் குழப்பமே இல்லை; சஞ்சலம் இல்லை; ஒரு குறையுமில்லை... குறையொன்றுமில்லை! அப்படி காப்பாற்றுகிறான் வாடபல்லி க்ஷேத்திரத்துப் பெருமான்.

வாடபல்லிக்கும் வேதாத்ரிக்கும் இடையிலே இருக்கும் மட்டபல்லி நாதனோ, சஞ்சலத்தையும் போக்குவான், ரோகத்தையும் போக்குவான்! நம்மிடத்திலே இருக்கிற அத்தனை கெடுதல்களையும் போக்கி, நலத்தையே கொடுக்கும் எம்பெருமான், இந்த க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கிறான். ஞான, பக்தி,

வைராக்கியம் என மூன்று சொல்வார்கள்... ஞானம் முன்னேயும் வைராக்கியம் பின்னேயும் குறிப்பிடப்படுகிறது. பக்தி நடுவிலே இருக்கிறது. இது எதைக் காட்டுகிறது என்றால், பக்தி என்பது நமக்கு வந்துவிட்டது எனில், ஞானமும் வைராக்கியமும் தானாகவே வந்து சேர்ந்து கொள்ளும் என்பதை.

பக்தி வராமல் ஞானம் சம்பாதிக்க முடியாது. பக்தி இல்லாமல் வைராக்கியம் வராது. அதேபோல்தான் இடையிலே இருக்கிற மட்டபல்லி நாதனுடைய அருள் நமக்குக் கிடைத்ததென்றால் வேதாத்ரியும் நம் கைவசம்; வாடபல்லியும் நம் கைவசம். இப்படி எல்லாவற்றையும் நமக்குக் கொடுக்கக் கூடிய நரசிம்ஹமூர்த்தி, மதுரத்துக்கெல்லாம் (இனிமை) நிலைக்களமாய் இருக்கிறான்.

பகவான் பெருமையை நமக்குச் சொல்கிற வேதமானது மிகவும் குரூரனாகவும் அவன் இருப்பதாகச் சொல்கிறது. சாந்த ஸ்வரூபியாகவும் இருப்பவன் அவனே...

நம: என்று அவனை வணங்கிவிட்டோமானால், கோபமாய், குரூரமாய் இருக்கும்படியான அவனது ரூபம், பரம சாந்தமாகி நம்மை ஆசிர்வதிக்கும் ரூபமாக மாறுகிறது. குரூரமான அவனை சாந்தப்படுத்த ஒரே ஒரு வழி– 'நம:' என்று உச்சரிப்பதுதான்... நம: என்று சொன்னாலே அவன் அப்படியே உருகி, நீர்ப்பண்டமாய் ஆகிவிடுகிறான். நம்மிடம் சந்தோஷமாக ஓடி வருகிறான்.

வேதத்திலே நமகம், சமகம் என்று மந்திரங்கள் வருகின்றன. நமகம், அவனை ஸ்தோத்திரம் செய்யும்படியான மந்திரங்கள். சமகம், நாம் கோரிக்கை சமர்ப்பிக்கும் விதமாக அமைந்த மந்திரங்கள். இப்படி இருவிதமாகவும் மந்திரங்கள் இருக்கின்றன.

அதனாலேதான் பகவானை ஸஹஸ்ர நாமத்தில் ஸ்தவ்ய: ஸ்தவ்யப்ரிய: என்று இருவிதமாகவும் சொல்கிறார்.

ஸ்தவ்ய: என்றால் ஸ்தோத்திரம் பண்ணத் தகுந்தவன்.

ஸ்தவ்யப்ரியா: என்றால் ஸ்தோத்திரத்தை விரும்பி ஏற்பவன்.

பகவானை என்னவென்று நாம் ஸ்தோத்திரம் பண்ண முடியும்...? எத்தனையோ குணாம்சங்கள் அவனிடத்திலே. அதையெல்லாம் அளவிட்டுச் சொல்லி ஸ்தோத்திரம் பண்ண நம்மால் முடியுமா..?!

உலக வழக்கிலே ஸ்தோத்திரமே இரண்டு வகையானது என்பார்கள். ஒருவரிடத்திலே என்ன உண்டோ அதை மட்டும் சொல்வது. இல்லாததைச் சொல்லி ஸ்தோத்திரம் பண்ணுவது இன்னொரு வகை.

## அருள்வாக்கு

சாதாரணமாக நம்மில் யாருக்கும் பிறரை ஹிம்சித்துப் பார்க்க வேண்டும் என்று ஆசையில்லை. ஆனாலும் பிறர் ஏதாவது குற்றம் செய்வதாக நமக்குத் தோன்றினால் அல்லது நமக்கு அவர்கள் கெடுதல் செய்வதாகத் தோன்றினால் அவர்களுக்குப் பலவிதத்தில் ஹிம்சை தர எண்ணுகிறோம். நம்முடைய சின்னஞ்சிறு குழந்தை தெரியாத்தனத்தால் நம் வீட்டில் நெருப்பு வைத்து விட்டால் குழந்தையை ஹிம்சிக்கிறோமா? அப்படிச் செய்ய மாட்டோம். நெருப்பை அணைக்கவே முற்படுவோம். மறுநாள் முதல் அந்தக் குழந்தை நெருப்பண்டை போகாமல் ரக்ஷிப்போம். நமக்குத் துன்பம் தருவதாகத் தோன்றுகிற எவரையும் அந்தக் குழந்தையாகவே பாவிக்க வேண்டும். மறுபடியும் தவறு செய்யாமல் அவரை அன்புடன் தடுத்து ரக்ஷிக்க வேண்டும். அவர் மீது துவேஷம் பாராட்டி, பதிலுக்கு

ஒரு புலவர் டெல்லிக்குப் போய் அரசனைப் பார்த்துப் பாடி வரலாம் என்று போனாராம். சின்ன குக்கிராமத்தவர், கஷ்டப்பட்டுப் போய்ப் பார்த்து, அரசனைப் பாடியும் முடித்தார். நூறு ரூபாய் சன்மானம் கொடுத்தானாம் அரசன்.

'இவ்வளவு தூரம் வந்து பாடியிருக்கிறோம் வெறும் நூறு ரூபாயா..?' என்று அலுப்பு வந்ததாம். 'சரி வந்தவரை லாபம்– 'சாகாய வாஸ்யாது லவணாய வாஸ்யாது – உப்பும் காய்கறியும் வாங்கவாவது உபயோகமாகுமே...' என்று சொல்லிக் கொண்டாராம்.

உள்ளூர்ப் புலவர் ஒருவர்– பொறாமை பிடித்தவர்! இதைக் கேட்டுவிட்டு அரசனிடம் போய்ப் புகார் செய்தார்: "நீங்கள் கொடுத்த சன்மானத்தை இப்படிக் குறை சொல்கிறார் பாருங்கள்..."

அரசன் கோபத்துடன் வெளியூர்ப் புலவரை வரவழைத்தான்.

"அப்படியா சொன்னீர் என்னைப் பற்றி... சாகாய வாஸ்யாது, லவணாய வாஸ்யாது...என்று"

"அந்த வார்த்தையைச் சொன்னது உண்மைதான். ஆனால் நான் சொன்னது உயர்ந்த அர்த்தத்தில்தான். உலகத்திலே

ஹிம்சை தரக் கூடாது. இதுதான் உண்மையான அஹிம்சை.

இது நம் மனத்தை வசப்படுத்திக் கொள்ளும் யோகத்துக்கு மிகவும் பிரயோஜனமாகிறது. மனம் பூதம் போன்றது. ஆனால் பூதத்தை- வேதாளத்தை- விக்கிரமாதித்தன் வசப்படுத்தியபின் அது அவனுக்காக எவ்வளவு காரியம் செய்தது! அப்படியே வசப்பட்ட மனம் எவ்வளவோ நல்லதைச் செய்யும்.

யானை கட்டுப்படா விட்டால் உலகுக்கு உபத்திரவம் தான். ஆனால் கட்டுப்பட்டு விட்டால் எத்தனை நல்ல காரியங்களை அதன் மூலம் சாதிக்க முடிகிறது! யானைபலம் கொண்ட மனசைக் கட்டுப்படுத்தினாலும் எத்தனையோ நல்லதைச் செய்யலாம். ஆஞ்சநேய ஸ்வாமி மனோஜயம் செய்ததால்தான் அவ்வளவு சக்தி பெற்றிருந்து அத்தனை சத்காரியங்களைச் செய்தார். மனத்தின் சக்தி அபரிமிதமானது. இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் பராசக்தியின் ஒரு மனம் தான் சிருஷ்டித்திருக்கிறது. இந்தச் சிருஷ்டியில் இருக்கிற ஒரு சிறிய எறும்பின் சின்ன மனமோ இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் பாய்ந்தோடுகிறது!

'அஹிம்சையை அநுசரித்தேன், மனம் வசப்பட்டது' என்று எத்தனையோ மகான்களும், யோகிகளும் சொல்லியிருக்கிறார்கள். அஹிம்சையினால் கோபம் போய், மனசானது அன்பில் தெளிந்து விடுவதால், அப்புறம் அதை வசப்படுத்துவது சுலபமாகி விடுகிறது.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

தாரித்ரியம் போக வேண்டுமானால் இரண்டு பேர் கொடுத்தால் தான் போகும்- ஒன்று அரசன்; மற்றது ஆண்டவன். இவர்கள் அன்றி பிறர் கொடுக்கும் பொருள் உப்பு வாங்கவும் காய் வாங்கவும்தான் உதவும்... அந்த அர்த்தத்தில்தான் நான் பாடினேன்...'' என்றார் புலவர்! அரசன் அப்படியே சந்தோஷமாகி பத்தாயிரம் ரூபாய் கொடுத்து விட்டான்!

இதை எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் புகழ்வதில்- ஸ்தோத்திரம் செய்வதில் இரண்டு வகை:

இருப்பதைச் சொல்லி ஸ்தோத்திரம் செய்வது.

இல்லாததையெல்லாமும் ஏற்றிட்டு ஸ்தோத்திரம் பண்ணுவது. - ராஜாவைப் பாடிய புலவர் இதைத்தான் செய்தார்.

இந்த இரண்டு விதங்களில் எந்த விதத்திலே பகவானை ஸ்தோத்திரம் பண்ணலாம் என்று பார்த்தாலும் காரியம் ரொம்பவும் கடினமானது.

அவனுக்கு உரிய குணங்களையெல்லாம் சொல்லி ஸ்தோத்திரம் பண்ணுவது சுலபமா! இதை வேதம் ரொம்ப அழகாகச் சொல்கிறது.

'இந்த உலகத்திலே இருக்கும்படியான மண் துகள்களை எண்ணினாலும் எண்ணலாம் **அவன்** பெருமையை முழுதாக எண்ணிச் சொல்லிவிட முடியாது...'

'சரி, இருப்பதைச் சொல்லி அவனை ஸ்துதிக்க முடியாது; இல்லாதவற்றைச் சொல்லி வைப்போம் என்று பார்த்தால்... அவனிடத்தில் என்ன இல்லை! எல்லாவற்றுக்கும் அவனே உறைவிடம்.

ஆக, இரண்டு விதங்களிலுமே அவனை ஸ்தோத்திரம் பண்ண முடியாது என்று ஆகிப் போகிறது. அப்படியும் அவனை நாம் ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டிருக்கிறோம் என்றால் அதுவும் பகவானுடைய காருண்யத்தினால்தான். அவனுடைய தயைக்கு நாம் பாத்திரர்களாக இருப்பதால், அவன் தன்னைத் தாழ இட்டுக் கொண்டு நாம் ஸ்தோத்திரம் பண்ணும்படியாகச் செய்கிறான்.

ஆகையினாலேதான் திருமங்கையாழ்வார் விசேஷமாக அவனைப் பற்றிச் சொல்கிறார்:

'எட்டும் மூன்றும் ஒன்றுமாகி நின்ற ஆதி தேவனே...' இதைப் பற்றி மேலும் விரிவாகச் சொல்கிறேன்.

(தொடரும்)

"அடுத்த வாரம் செமினார். உங்கள் பேப்பர் ரெடியா?" அறிமுகமானவுடன் மிஸ்டர் தாபா கேட்ட முதல் கேள்வி.

"எனக்குச் சில சஞ்சிகைகள் தேவை, நேபாளத்தின் மிகப் பழைமையான கோவில்களின் வரலாறும், பழைய கட்டடங்களின் பின்னணியும் தேவை. ஒரு கைடு கிடைத்தால் இரண்டு மூன்று நாட்களில் என் கட்டுரையை முடித்து விடுவேன்!" என்றான் சூர்யா.

"இங்கு தடுக்கி விழுந்தால் கூட கைடுகள் கைகொடுத்துத் தூக்கி விடுவார்கள். அந்த அளவுக்கு இளைஞர்கள் கைடாகப் பணியாற்றுகிறார்கள்!" என்று சிரித்த தாபா, "நம்ம நூலகத்தில் பணிபுரியும் உஜ்வலா என்ற பெண், நாளை உங்களுடன் வந்து எல்லா இடங்களையும் சுற்றிக் காட்டுவாள். இந்தப் பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரை அவள் தான் எல்லா வெளிநாட்டு விருந்தினருக்கும், மாணவர்களுக்கும் வழிகாட்டி..." என்றவர், "நாளை மதியம் மூன்று மணிக்கு மீண்டும் சந்திக்கிறேன்!" என்று கிளம்பி விட்டார்.

'இன்று பகல் முழுவதும் என்ன செய்வது? நாமே ஒரு டாக்ஸியில் ஏறி ஊரைச் சுற்றிவிட்டு வந்தால் என்ன!' என்று நினைத்த



போட்டிக்கதை - 11

# உஜ்வலா

படி கல்லூரி வளாகத்திலிருந்து வெளியில் வந்தான் சூர்யா.

அவனை உரசின மாதிரி வந்து நின்ற டாக்ஸியிலிருந்து ஒரு முகம் எட்டிப் பார்த்தது.

''சாப், டாக்ஸி... கைடு?''

அட... நினைத்த மாத்திரத்தில் எல்லாம் நடக்குதே! என்று வியந்தபடி டாக்ஸியில் ஏறிக் கொண்டான்.

சுமாரான ஆங்கிலத்தில் தனக்குத் தெரிந்த கதைகளை அளந்து கொண்டே வந்த அந்த இளைஞன் "சாப்.. உதரோ..." என்றான். "இதுதான் தர்பார் ஸ்கொயர்...." என்று காரின் கதவைத் திறந்து விட்டான்.

நாலாபக்கமும் பழைய காலத்து, விசாலமான, மண்டபம், கோயில், அரண்மனை என்று கண்கொள்ளாக் காட்சி.

"இதுதான் காஷ்ட மண்டபம். ஒரே மரத்தினால் ஆன விசாலமான மண்டபம். அந்தப் பக்கம், ஹனுமான் டோக்கா. இந்தப் பக்கம் குமாரி பஹல். முதலில் இந்த ஆஞ்சனேயரை வழிபட்டு ஆசிபெற வேண்டும்!" என்றான். ஆஞ்சநேயரின் ஆசியுடன் நடந்தனர்.



மரத்தினாலான அந்தப் பெரிய மண்டபத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வலது பக்கம் சிறிது தூரம் நடந்தவுடன் ஒரு பழைய அரண்மனை வாசலில், கல்லினாலான இரண்டு பெரிய சிங்கங்கள் வீற்றிருந்தன.

"சாப், இது குமாரி பஹல் (Behal). வாங்க உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வருவோம்" என்று உள்ளே அழைத்துச் சென்றான்.

விசாலமான முற்றத்தைச் சுற்றி நாலா பக்கமும் மண்டபம். மேலே அழகான ஜன்னல்கள். ஒரு பக்கம் குறுகலான மச்சுப்படி. மேலே ஏறிச் சென்றனர். ஒரு தாழ்வாரத்தில் பல காலணிகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. இன்னொரு மச்சுப் படியைத் தாண்டி மறுபக்கத்திருந்த கூடத்தை அடைந்தனர். சூர்யாவுக்கு எதுவும் புரியவில்லை. ஏகக் கூட்டம். எட்டிப் பார்த்தான்.

ஆறு வயது மதிக்கத்தக்க ஒரு சிறுமி அலங்கரிக்கப்பட்ட சிறிய மேடையில் அமர்ந்திருந்தாள். சிவப்பு வண்ண ஆடை. தலையில் கொண்டை. நெற்றி முழுவதும் குங்குமப்பூ குழைத்துத் தடவப்பட்டு மத்தியில் மூன்றாவது கண். மஞ்சள், கறுப்பு வண்ணத்தில் வரையப்பட்டிருந்தது. கண்களில் இட்ட மையின் கறுப்புக் கோடுகள் காது வரை நீண்டிருந்தன. கழுத்தில் தங்க ஆபரணம். காலில் கொலுசு. கைகளில் தங்க வளையல்கள். கால்களைப் பெரிய தட்டில் வைத்திருந்தாள். பக்தர்கள் அச் சிறுமியை வலம் வந்து காணிக்கை செலுத்திக் கும்பிட்டனர். கைகூப்பியபடியே சூர்யா வெளியில் வந்தான். கீழே சில அயல்நாட்டு டூரிஸ்டுகள் நின்றிருந்தனர். திடீரென்று ஒரு பலகணி வழியாக அந்தச் சிறுமி எட்டிப் பார்த்தாள். மறுகணம் மறைந்து விட்டாள்.

"இது யாருப்பா... ஒன்றுமே புரியவில்லையே?"

"இவள்தான் இங்கு நடமாடும் தெய்வம். பன்னிரண்டு வயது வரை இங்கிருப்பாள்."

"அப்புறம்?"

"வேறு ஒரு சிறுமி. இவள் எல்லோரையும் போல் வாழ்க்கை நடத்துவாள்."

"குமாரி தெய்வமாக இந்தச் சிறுமி எப்படித் தேர்வு செய்யப்பட்டாள்? எனக்கு விவரமாகச் சொல்ல வேண்டும்."

சூர்யாவுக்கு ஏக திகைப்பு. நம்ம அடுத்த ஆராய்ச்சிக்

விஜயலக்ஷ்மி சுந்தரராஜன்

கட்டுரைக்கு குமாரியை எடுத்துக் கொண்டால் என்ன என்று யோசித்தான்.

"புத்த மதத்தைச் சேர்ந்த நேபாளி மக்களில் பொற்கொல்லர்கள் குடும்பத்தைச் சேர்ந்த சிறுமிகளைத்தான் குமாரி தெய்வமாகத் தேர்ந்தெடுப்பார்கள். அரே, பண்டிட்ஜி, சுனியே... என்று ஒருவரைக் கூப்பிட்டு, 'இவருக்கு குமாரி பஹல் பற்றித் தெரிய வேண்டுமாம். அழைத்துப் போங்கள்..." என்றவன் – "நீங்க அவருடன் உட்கார்ந்து பேசுங்க... விவரமாகச் சொல்லுவார். எனக்கு நூறு ரூபாய் கொடுங்க. அவருக்கு உங்க இஷ்டம் போல் பத்து... இருபது... என்ன!" என்று இளித்தான்.

'இவன் என்ன கைடு... நூறு ரூபாய் எதுக்கு?' என்று பையிலிருந்து பணத்தை எடுத்தான் சூர்யா. நூறு ரூபாய் நோட்டை அவன் கையிலிருந்து உருவிக் கொண்டு, "நமஸ்தே.... சாப்..." என்று ஓடி விட்டான்.

"உங்க கணவரை நீங்க விவாகரத்துப் பண்ண என்ன காரணம்?"
"சின்னச் சின்ன விஷயங்களுக் கெல்லாம் காரண காரியம் சொல்லிக்கிட்டிருக்க முடியாது சார்!"
– சீர்காழி வி. ரேவதி



வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பண்டிட்ஜி, "இவன் இப்படித்தான். அதோ பாருங்க, வெளிநாட்டிலிருந்து வரும் டூரிஸ்டுகள் நிறைய டாலராக அள்ளித் தருவார்கள். இவன் அளக்கும் கதையைக் கேட்டு விட்டுப் புத்தகத்தில் பார்த்தால் அப்படி எதுவும் இருக்காது."

"என்னை ஏன் கழற்றி விட்டான்?" என்றான் சூர்யா.

"நீங்க விரவம் கேட்டீங்க, சரித்திரத்தில் உள்ளபடி எல்லாம் சரியாகக் கூற வேண்டுமே... இவனுக்கு என்ன தெரியும்? அரைவேக்காடு..." என்று சிரித்து விட்டு, "வாங்க, அப்படிப் போய் உட்கார்ந்து பேசலாம்!" என்று அருகிலிருந்த ஓரிடத்தில் போய் அமர்ந்தார்.

"பண்டிட்ஜி, நான் இந்தியாவில் இருந்து வந்திருக்கிறேன். ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதுவேன். குமாரி பஹல் பற்றி எனக்கு எல்லா விவரங்களும் தெரிய வேண்டும்!" என்றான் சூர்யா.

"குமாரி தேவதை பற்றி பல கதைகள், பல வித நம்பிக்கைகள் உலவுகின்றன. இந்த நடமாடும் தெய்வத்தை இந்நாட்டு மக்கள் பக்தியுடன் வழிபடுகிறார்கள். பார்வதியின் அவதாரம் என்கிறார்கள். 32 இலட்சணங்கள் பொருந்திய, நேப்பாளி பொற்கொல்லர்கள் குடும்பத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுமிகளை பலவித பயங்கர சோதனைகளுக்கு உள்ளாக்கி, எல்லாவற்றிலும் கலங்காமல், தைரியமாக, சாந்தமாக, இருக்கும் சிறுமிதான் குமாரி தெய்வமாக இருப்பாள். 5 -லிருந்து 12 வயது வரை அவள் குமாரி பஹலில் தெய்வமாக வீற்றிருப்பாள்.

"அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட ஒரு அம்மா தன் குடும்பத்துடன் பஹலில் வசிப்பாள். குமாரியை எல்லாவிதத்திலும் அவள் தான் கவனித்துக் கொள்வாள். அவள் குழந்தைகளுடன் விளையாடலாம். அங்கேயே ஆரம்பப் பாடம் கற்றுக் கொள்ளலாம். அவள் பெற்றோர்கள் அவ்வப்போது வந்து போவார்கள். பருவமடையும் தருணத்தில் பெற்றோர்களுடன் அனுப்பப்படுவாள். அரசாங்கமே அவளுடைய தேவைகளுக்காக ஒரு தொகையைக் கொடுத்து விடும். அதை மானியம், டௌரி, பென்ஷன்... எப்படி வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்.

"அப்புறம் எல்லோரையும் போல அவளும் ஒரு சாதாரண பிரஜைதான். குமாரியின் பொது வாழ்வு கோவிலில் தானே இருக்கும். வருடத்திற்கு இரண்டு முறை "தசைன் மற்றும் இந்திரஜாத்திரா" என்ற பண்டிகை நாளில் ரதத்தில் ஊர்வலமாக வருவாள். அரசரும் அரசியும் இந்தப் பண்டிகை நாளில் குமாரி பஹல் வந்து ஆசிபெற்றுச் செல்வார்கள்."

"மிக்க நன்றி ஐயா, ஒரே ஒரு கேள்வி. நீங்க தப்பா நினைக்கலைன்னா இப்படி கட்டுப்பாடுகள் இருக்கே... எப்படி பெற்றோர்கள் தங்கள் குழந்தையைக் குமாரியாக்க இசைகிறார்கள்?"

"நன்றாகக் கேட்டீங்க... தெய்வமாகும் பாக்கியம் எல்லாருக்கும் கிடைக்குமா? அரசாங்கத்தில் இருந்து கிடைக்கும் பல வசதிகளை யாராவது வேண்டாம் என்பார்களா?"

"அந்தப் பெண்ணின் எதிர்காலம்?"

"படித்து வேலைக்குப் போகலாம், பரம்பரைத் தொழிலை கவனிக்கலாம், வயலில் வேலை செய்யலாம், எவ்வளவோ இருக்கே!"

"திருமணம், குடும்ப வாழ்க்கை - சாதாரணமா?... தெய்வமா இருந்தவளை யாரும்...."

"பண்டிட்ஜி, சுனியே..." என்று யாரோ அழைத்தவுடன், "தம்பி போய் வா!" என்று

எழுந்து விட்டார்.

பர்ஸைத் திறந்து ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து அவர் கையில் வைத்தான் சூர்யா.

"என்னப்பா இது! நான் கைடா? ஏதோ எனக்குத் தெரிந்ததைக் கூறினேன்!" என்று மறுத்தார். சூர்யா வற்புறுத்தி அந்தப் பணத்தை ஏற்றுக் கொள்ளச் செய்தான்.

மறுநாள் உஜ்வலா என்ற பெண் பாட்டன், பக்தாபூர் என்று பல இடங்களுக்கு அழைத்துச் சென்று, பழைய கோயில்கள் மற்றும் அரண்மனைகளின் பின்னணியைப் பற்றி விவரமாக எடுத்துக் கூறினாள்.

"இந்த ஊரிலும் தர்பார் ஸ்கொயர், ஹனுமான் டோக்கா, பல பலகணிகள் கொண்ட விசாலமான அரண்மனை, ராஜாவின் குளியலறை, சங்கிலியால் தரையில் பிணைக்கப்பட்ட பெரிய பெரிய வெண்கல மணிகள்.... அப்பா... இவ்வளவு சின்ன நாட்டில் இத்தனை சிறப்புக்களா?"

சூர்யாவையே கவனித்துக் கொண்டிருந்த உஜ்வலா, "என்ன வியப்பாக இருக்கிறதா? இன்னும் எவ்வளவோ இருக்கு. எங்க நாட்டில்!" என்றாள் பெருமையுடன்.

குறிப்புகள் எடுக்கப் பலவிதத்திலும் உதவிய உஜ்வலாவே ஒரு ஆச்சர்யம்தான். இத்தனை விஷயங்களை எப்படித் தெரிந்து வைத்திருக்கிறாள்? பதற்றமில்லாமல், குழப்பமில்லாமல் எதையும் தெளிவாக எடுத்துக் கூறும் உஜ்வலா, உண்மையாகவே ஒரு சிறந்த கைடு என்று நினைத்தான்.

"போதும் மிஸ் உஜ்வலா... திரும்பலாம். இந்த விவரங்களை வைத்துக் கொண்டு பத்து செமினாருக்குக் கட்டுரை எழுதி விடுவேன்" என்றபடி டாக்ஸியில் ஏறினான் சூர்யா.

அடுத்த இரண்டு நாட்களில் தன் கட்டுரையை எழுதி முடித்து, பிரதிகள் எடுத்து பிளாஸ்டிக் ஃபோல்டர்களில் தனித்தனியாக வைத்து, அழைப்பாளர்களின் பெயரை எழுதி... இத்தனை வேலைகளையும் சிரித்துக் கொண்டே முடித்துக் கொடுத்த உஜ்வலாவை எப்படிப் பாராட்டுவது என்றே சூர்யாவுக்குப் புரியவில்லை.

"எனக்கு எதுக்குப் பாராட்டு? நான் என் கடமையைத்தான் செய்தேன். செமினார் முடியட்டும், அப்புறம் உங்களை வேறு சில இடங்களுக்குக் கூட்டிப் போகிறேன். அஃப்கோர்ஸ் நாட் அஃபீசியல் விசிட்...." என்று சிரித்தாள்.

இந்த ஒரு வாரத்தில் பலரையும் சந்தித்த சூர்யாவுக்கு ஒன்று மாத்திரம் நன்றாகப் புரிந்தது. இங்கு வேலை செய்பவர்கள் சிரித்துக் கொண்டே செய்கிறார்கள். அன்னியர் கேட்கும் கேள்விகளுக்கும் புன்னகையுடன் விடையளிக்கிறார்கள். ஒருகால் சீதோஷ்ண நிலைதான் காரணமோ... எங்கும், எதிலும் குளிர்ச்சி.

"இங்கு எல்லோரும் இன்முகம் காட்டி உதவுகிறார்கள். ஆச்சரியமா இருக்கு. மிஸ் உஜ்வலா!"

"மிஸ் என்ற அடைமொழி வேண்டாம் சூர்யா. பி இன் பார்மல். நம்ம வீட்டுக்கு விருந்தினர் வந்தால் நம்ம கஷ்ட நஷ்டங்களை முகத்தில் காட்டுவோமா...? பல நாடுகளிலிருந்து வரும் டூரிஸ்டுகளினால்தான் இந்த நாட்டினர் சுமாராக வாழ முடிகிறது. நம்மைத் தேடி வரும் ஸ்ரீதேவியை சிரித்த முகத்துடன் வரவேற்பது தானே முறை!" என்றாள்.

ஆஹா... பேச்சில் என்ன தெளிவு? எல்லா கேள்விகளுக்கும் ரெடியாக ஒரு பதில் வைத்திருக்கிறாளே. இவளை எப்படியாவது மடக்க வேண்டும் என்று வேடிக்கையாக நினைத்த சூர்யா –

"நீ கொடுத்த விவரங்களை வைத்து நேபாளத்தைப் பத்தி ஒரு புத்தகமே எழுதலாம் போலிருக்கு...." என்றான்.

"இந்த விவரங்கள் போதாது. அடுத்த தடவை வரும்போது இந்த நாட்டுப் பழக்க வழக்கங்கள் கலாசாரம், மொழி, மதம் பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டாமா?" என்று திருப்பிக் கேட்டாள்.

"இந்த வருடம் நான். அடுத்த வருடம் வேறு யாராவது ஒரு வரலாற்றுப் பேராசிரியர் வரலாம்..."

"பரவாயில்லை. நீங்க சும்மா ஒரு டூரிஸ்டா வாங்க..." என்றவன், "அப்ப நாளைக்கு செமினாரில் பார்க்கலாம். பெஸ்ட் ஆஃப் லக்..."

"படம் எடுத்து நஷ்டமானதை புஸ்தகம் எழுதி ஈடுகட்டினீர்களா? என்ன தலைப்பில் எழுதினீர்கள்?"



"வெற்றிகரமாக சினிமா எடுப்பது எப்படின்னுதான்!"
– வீஎஸ். கணேசன்

என்று விடைபெற்றாள்.

**செ**மினாரில் சூர்யா படித்த பேப்பர் பலராலும் பாராட்டப்பட்டது. சூர்யாவை விட உஜ்வலாவுக்குத்தான் அதிக சந்தோஷம். ஏதோ பெரிதாகச் சாதித்து விட்டதைப் போன்ற பெருமிதம். தேநீர் விருந்து முடிந்து, எல்லோரும் கலைந்து சென்றபின், சூர்யாவும் உஜ்வலாவும் மெதுவாக நடந்து கொண்டே மாணவர்கள் கேட்ட வினாக்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். உஜ்வலாவின் உற்சாகமான, அறிவுபூர்வமான பேச்சு அவனை மிகவும் கவர்ந்தது. ஆகா... இப்படியோர் அழகான, படித்த, புத்திசாலியான பெண் நமக்கு வாழ்க்கைத் துணையாக அமைந்தால்....

"உஜ்வலா... உன்னிடம் ஒன்று கேட்க வேண்டுமே!"

"தாராளமாக. தயக்கம் வேண்டாம் எதுவானாலும் கேளுங்கள்...!"

"இங்கு திருடர்கள் அதிகம் என்று கேள்விப் பட்டேன்..."

"உண்மைதான். கண் அசந்தால் ஆளையே தூக்கிட்டுப் போயிடுவாங்க. ஜாக்கிரதையாக இருங்க..."

"டூ.... லேட்..... நான் திருட்டுக் கொடுத்து விட்டேன்!" என்றான் சூர்யா.

"என்ன திருட்டுப் போயிடுச்சா? என்ன பணமா, சூட்கேஸ்...."

"இல்லை... இல்லை... ஒரு பாட்டு நினைவுக்கு வருது. கேளு. உள்ளம் தன் நிலை தளர்ந்தது உன்னைக் கண்டது முதல்."

"என்ன... என்ன சொன்னீங்க?"

"சீரியஸா பேசுவோம். இந்த ஊரு, உங்க கலாசாரம், உங்க மொழி எல்லாம் எனக்குப் பிடிச்சிருக்கு. இது எப்போதும் நீடிக்க வேண்டுமானால் உன் துணையும் வேண்டும்."

"விளையாடாதீங்க, எனக்கு இந்த பேச்சே பிடிக்கவில்லை. வாங்க எங்க வீட்டுக்கு அழைத்துப் போகிறேன். முதலில் ஏதாவது சுடச்சுட சாப்பிடுவோம்."

"வேண்டாம்... நான் என் ஹோட்டலுக்குப் போக வேண்டும்."

"போகலாம் இப்ப என்ன அவசரம்?" என்றவள் ஒரு டெம்போவில் ஏறினாள். பத்துப் பேர் உட்கார வேண்டிய டெம்போவில் பன்னிரண்டு பேர். இப்ப பதினாலு.

அருகில் இருந்த ஒரு ஹோட்டலுக்கு அழைத்துப் போனாள். சிற்றுண்டி அருந்தி விட்டு நேரே அவள் வீட்டுக்குத்தான் என்று சொன்னாள். வீட்டில் யாரும் இல்லை. அம்மா வயல் வேலைக்குப் போய் விட்டாள். அப்பா சற்று நேரத்திற்கு முன்தான் வெளியில்

போயிருக்க வேண்டும்.

மண், மூங்கில் மற்றும் மரத்தினாலான சிறிய வீடு. சுமாரான அலங்காரம். பொழுது சாய்ந்து விட்டதால் இரண்டு நாற்காலிகளை வாசலில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்கள். ஜன்னல் வழியாக அலமாரியில் அடுக்கி இருந்த புத்தகங்கள் கண்ணில் பட்டவுடன் சூர்யா ஆவலுடன் கேட்டான்.

"உஜ்வலா... நிறைய புத்தகங்கள் இருக்கே? எதைப் பற்றியது?"

"அப்பா ஒரு புத்தகப் பைத்தியம். படித்துக் கொண்டே இருப்பார். அவருக்குத் தெரியாத விஷயங்களே கிடையாது. பராகுருஜீ (ராஜ புரோகிதர்) அடிக்கடி இங்கு வந்து அப்பாவிடம் பல சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வார்."

"நான் அந்தப் புத்தகங்களைப் பார்க்கலாமா?"

"பாருங்க. ஆனால் எல்லாம் நேபாளியில் எழுதியவை. புரியுமா?" என்று சிரித்தாள். 'சிரித்தால் கண்கள் சுருங்கி விடுவதைத்தான் பார்த்திருக்கிறேன். இவளுக்கு கண்கள் மலருகிறதே... எப்படி.... இவள் முகம் அழகா... கண்கள் அழகா? கண்களினால் முகத்துக்கு இப்படியொரு பிரகாசமா....'

"என்ன பார்க்கிறீர்கள்?" மறுபடியும் ஒரு சிரிப்பு.

"உனக்கு என்னைப் பிடிச்சிருக்கா...?"

அசட்டுத்தனமான கேள்வி. ஆனால் அவனால் வேறு எதுவும் கேட்க முடியவில்லை.

"அப்படின்னா...."

"புரியவில்லையா? முதல் நான் உன்னைப் பார்த்தவுடன் உன் அழகில், பேச்சில் மயங்கி விட்டேன். இது சாதாரண கவர்ச்சி அல்ல.. ஆனால் என் நினைவை விட்டு ஒரு நிமிடம் கூட நீங்காத உன் முகத்தை ரசித்துக் கொண்டே இருக்கிறேன். உன் அப்பா வருவதற்கு முன் உன் முடிவைக் கூறினால்... ஐ மீன்... சாதகமான முடிவை..."

"எனக்குக் காதல், கல்யாணம், குடும்ப வாழ்க்கையில் துளிகூட நாட்டமில்லை. நான் எல்லோரிடமும் இப்படித்தான் சகஜமாகப் பழகுவேன். ஆனால் யாரும் என்னை இப்படிக் கேட்டதில்லை. தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள். என் அப்பாவிடம் இதுபற்றி..."

"நீ பேச வேண்டாம். நானே பேசி சம்மதம் வாங்கி விடுகிறேன்!"

"ப்ளீஸ்... வேண்டாம்..."

"என்ன உஜ்வலா... யாரு வந்திருக்கா?" என்று கேட்டபடி ஒருவர் உள்ளே வந்தார். லேசான இருட்டில் யாரு என தெரியாவிட்டாலும் உஜ்வலாவின் தந்தையாகத்தான் இருக்கும் என்று சூர்யா நினைத்தான்.

"அப்பா, செமினார்ல பேப்பர் படிக்க வந்திருக்கும் சூர்யா..." என்று அறிமுகப்படுத்தி விட்டு உள்ளே சென்று விட்டாள்.

குடையை ஒரு பக்கமாக வைத்து விட்டுத் திரும்பியவர், சூர்யாவைக் கூர்ந்து கவனித்து விட்டு....

"நீங்கள்... நீ..."

"ஆம்... அய்யா... உங்களைத் தர்பார் ஸ்கொயரில் சந்தித்தேன். பல விஷயங்களைப் பற்றி நிறைய புத்தகங்கள் இருப்பதாக உஜ்வலா கூறினாள்...." என்று பேச்சைத் துவக்கினான். மனதில் ஒரு குதூகலம். அப்பா, தெரிந்தவராகி விட்டார். இனி தன் மனத்தில் இருப்பதைச் சுலபமாக தெரிவிக்கலாம் என்று நினைத்தான் சூர்யா.

"புத்தகமா...." கலகலவென்று சிரித்தவர், "அது தான் எனக்கு உணவு, பொழுதுபோக்கு, வாழ்க்கை... எல்லாம். டீ சாப்பிட்டாயா? உஜ்வலா ரொம்ப நன்றாக டீ போடுவாள்!" என்றார்.

இரண்டு கோப்பைகளில் டீயுடன் உஜ்வலா வந்து கொண்டே, "என்னப்பா என்னைப் பத்தி என்ன சொன்னீங்க?" என்றாள்.

"நீ நன்றாகச் சமைப்பாய் என்றேன்..." – என்று பெரியதாகச் சிரித்துவிட்டு, "தம்பி, இன்று இரவு இங்கு உணவருந்தலாமா? நாங்கள் சைவம்தான். உனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லையே!"

"இன்று வேறு ஒரு விஷயமாக வந்துள்ளேன். அதனால் நாளை காலை உணவு இங்கே தான்!" என்றவன் ஓரக்கண்ணால உஜ்வலாவைப் பார்த்து முறுவலித்தான். கோப்பைகளை எடுத்துக் கொண்டு அவன் உள்ளே சென்றவுடன்...

"என்னப்பா... செமினார் நல்லபடியா

**"இன்னிக்கு உன் மாமியார் எதுக்கு அப்படிச் சத்தம் போட்டார்?"**



**"எனக்கு இன்னும் நிறைய பொறுமை தேவையாம்!"**
**–வீ.எஸ். கணேசன்**

# நேயர்களை மதிக்கும் மலேசிய டெலிவிஷன்!

"டெலிவிஷனின் எந்த நிகழ்ச்சியானாலும் சரி, அதைப் பார்த்தவுடன் உடனே தங்களது கருத்தை டெலிபோனில் சொன்னால்தான் மலேசிய நேயர்களுக்குத் தூக்கம் வரும். ஆஹா ஓஹோ! என்று எப்போதும் பாராட்டிக் கொண்டிருப்பார்கள் என்றால் ஏமாந்து போவோம். முதுகில் தட்டுவது போலவே தலையிலும் குட்டுவார்கள். எங்களிடம் தனியாக ஒரு நேயர் பிரிவே இயங்குகிறது. அந்தப் பிரிவில் கிட்டத்தட்ட மூன்னூறு தொலைபேசிகள் இருக்கின்றன. கால்கள் வந்து கொண்டே இருக்கும். கருத்துக்கள் பதிவாகிக் கொண்டே இருக்கும். இதில் முக்கிய விஷயம் என்னவென்றால் எங்களுக்குப் போன் செய்தால் அந்தக் காலுக்கு நேயர்கள் பணம் கொடுக்க வேண்டியதில்லை. எங்கள் நிர்வாகமே தருகிறது.



"நேயர்களின் தொலைபேசிக் கால்களுக்கு நாம் பணம் கொடுக்கிறோம். பணத்தையும் கொடுத்துவிட்டு அவர்களிடமிருந்து குறைகளை விமர்சனமாகக் கேட்க வேண்டிய நிலையில் நம் நிகழ்ச்சிகள் அமையக் கூடாது. எனவே, மிகுந்த கவனத்துடன் ஒரு சிறிய தவறும் வந்து விடாமல் செய்யுங்கள்' என்று எங்கள் மேலிடம் எங்களை நினைவூட்டிக் கொண்டே இருக்கும். ஒவ்வொரு வினாடியும் நாங்கள் விழிப்புடன் செயல்பட்டாக வேண்டும்!"என்றார் என்.வி.ராஜாமணி.

மலேசியாவிலுள்ள மியாஸட் ஒலிபரப்புக் கழகத்தில் பணிபுரியும் இவர், நமது சென்னை டெலிவிஷனின் முன்னாள் துணை நிலைய இயக்குனர். இப்போது அந்த ஒலிபரப்புக் கழகத்தின் 'வானவில்' என்ற இந்திய சானலின் தலைமைப் பொறுப்பாளர். இதெல்லாம் நம்மூர்க்காரர்களின் காதுகளில் விழுந்தால் தேவலை என்கிறீர்களா?

-ஆர்.எம்.

நடந்ததா? உன்னை மாதிரி பல நாடுகளிலிருந்து மாணவர்களும், புரொபசர்களும், ஆய்வாளர்களும் வந்து கொண்டே இருப்பார்கள்!" என்றார் பண்டிட்ஜி.

"என் கட்டுரை நன்றாக இருந்தது என்று எல்லோரும் பாராட்டினார்கள். அய்யா, உஜ்வலா உங்கள் பெண் என்று எனக்குத் தெரியாது. உங்களைப் போலவே மிக்க அறிவாளியாக இருக்கிறாள். பல விஷயங்களைத் தெரிந்து வைத்திருக்கிறாள்!" என்றான்.

"ஏதோ கடவுள் கொடுத்த பிச்சை... எனக்கு ஒரே மகள்."

"அய்யா.... இப்படிப்பட்ட அறிவும், அழகும் பொருந்திய பெண்ணுக்குத் திருமணம் செய்வது பற்றி நீங்க என்ன நினைக்கறீங்க?" என்று மனத்தில் தோன்றியதை உடனே கேட்டு விட்டான்.

"திருமணமா...? அவளுக்கா... அவள் சம்மதிக்க மாட்டாள்."

"அவளுக்கும் என்னைப் பிடித்திருக்கிறது."

"பிடித்ததை எல்லாம் ஏற்றுக் கொள்ள முடியுமா.... அவள் எல்லோருடனும் அன்பாக, சகஜமாகப் பழகுவாள். அது ஒரு குற்றமா?" என்றார் எரிச்சலுடன்.

"கோபப்படாதீங்க அய்யா... நான் ஏதும் தவறாகப் பேசி விட்டேனா?"

"இல்ல தம்பி.. உன் விருப்பத்துக்குத் தலையாட்ட முடியாது. அவ்வளவுதான்..." என்று எழுந்தார். உடனே அவர் கையை பிடித்துக் கொண்டு வினயமாக -

"அய்யா... நான் நாளை இந்தியா திரும்புகிறேன். நீங்கள் யோசனை செய்து உங்கள் முடிவைத் தெரிவித்தால் போதும்."

"இதில் யோசனை செய்ய எதுவும் இல்லை. இந்தியாவில் இல்லாத அழகா... புத்திசாலித்தனமா? அழகான, அறிவுள்ள ஒரு பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் செய்து கொள்...."

"நான் உஜ்வலாவை மனமாரக் காதலிக்கிறேன். உயிருள்ளவரை அவளைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வேன். இது சத்தியம்!" என்று அவர் கையைப் பற்றிய சூர்யாவின் கையை உதறிய பண்டிட்ஜி, அழுத்தமாகக் கூறினார், "நடைமுறைக்கு ஒத்துவராத விஷயம் பற்றிப் பேச நான் தயாராக இல்லை."

"அப்படி என்ன சிக்கல் இருக்கு... கோபப்படாமல் விவரமாகச் சொல்லுங்க அய்யா!" என்றான் சூர்யா உடைந்த குரலில்.

"எனக்குக் கோபமில்லை. வருத்தம்பா.

தெய்வ குற்றத்துக்கு ஆளாகி விடுவோம் என்று அஞ்சுகிறேன்."

"என்ன?"

"ஒரு காலத்தில் உஜ்வலா குமாரி தெய்வமாக இருந்தவள். தெய்வத்தை 'மனைவியாக ஏற்று வாழ்க்கை நடத்த முடியுமா?"

"இப்ப அவள் சாதாரணப் பெண்தானே!"

"ஆனால் எங்க கலாசாரம், ஊர்க் கட்டுப்பாடு, வழி வழியாக வந்த சமுதாய நெறியைக் காப்பாற்ற வேண்டாமா?"

"இது மூடநம்பிக்கை. 'அந்தக் காலத்தில் பெண்கள் வீட்டிலேயே இருந்தார்கள். எதுவும் சாத்தியமாக இருந்தது. அறியாப் பருவத்தில் தெய்வமாக மற்றவர்கள் நினைத்தார்கள். அந்தப் பெண்ணுக்கு எதுவும் தெரியாது. இப்ப கனவைப் போல் நடந்த ஒன்றை நினைவு படுத்தி அவள் வாழ்க்கையைப் பாழாக்க வேண்டுமா?" என்றான் ஆத்திரத்துடன்.

"அவசரப்படாதே.. தம்பி... எங்க சமுதாய நீதிப்படி தெய்வமாக பூஜிக்கப்பட்டவளை எந்த ஆண் மனைவியாக நினைத்து வாழ முடியும்? மேலும்... வேண்டாம் விடுப்பா..." என்று முகத்தை திருப்பிக் கொண்டார் பண்டிட்ஜி.

"என்ன பண்டிட்ஜி... என்ன எதையோ மறைக்கறீங்க... தயவுசெய்து சொல்லுங்க. எந்தத் தடையாக இருந்தாலும் தயங்காமல் கூறுங்கள்."

"வந்து... இங்கு பரவலாக ஒரு நம்பிக்கை. குமாரி, பெண்ணை மணந்தால் அமங்கலம் உண்டாகும்...." என்றார் நிதானமாக.

"அப்படின்னா....?"

"அவளை மணப்பவன் இரண்டு, மூன்று ஆண்டுகளில் இறந்து விடுவான். இதற்கு யாராவது சம்மதிப்பார்களா.. நீயே சொல்..."

அவன் சுற்று முற்றும் பார்த்தான். உஜ்வலா அங்கு இல்லை என்று தெரிந்தவுடன் "அய்யா, உங்க பெண்ணை நான் உண்மையாக நேசிக்கிறேன். எந்தக் காரணத்தைக் கொண்டும் என் முடிவை மாற்றிக் கொள்ள முடியாது. நீங்கள் மனதார எங்களை வாழ்த்துங்கள். அது போதும்...."

"உஜ்வலா... உஜ்வலா... இங்கே வாம்மா..."

உஜ்வலா வாசற்படியில் வந்து நின்றாள். வெளிச்சத்தின் பின்னணியில் முகம் சரியாகத் தெரியவில்லை.

"என்னப்பா?" என்றாள் உடைந்த குரலில்.

"நான் எவ்வளவோ சொல்லியும் இவர் பிடிவாதமாக இருக்கார். எந்தச் சந்தர்ப்பத்திலும் தன் பெண் நன்றாக இருக்க வேண்டும் என்று தான் பெற்றோர்கள் நினைப்பார்கள். உன்னை மணக்கோலத்தில் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருந்தும் அதை மனத்தின் ஆழத்தில்... புதைத்து வைத்திருந்தேன். உனக்குச் சம்மதமாம்மா.... இப்படி வா..." என்றார் கனிவான குரலில்.

தந்தையிடம் வந்து நின்ற உஜ்வலா தெளிவான குரலில் நிதானமாகக் கூறினாள் : "முதல் சந்திப்பிலேயே நானும் என் மனத்தைப் பறி கொடுத்து விட்டேன் அப்பா. இவரை நான் என் ஆயுள் உள்ள வரை காதலிப்பேன். ஆனால்... பலமுறை நீங்க சொல்லிச் சொல்லி, நான் சாதாரணப் பெண் இல்லை என்று என் மனத்தில் பதிந்து விட்டது. இந் நிலையில் நான் இவரை எப்படியப்பா கல்யாணம் செய்து கொள்ள முடியும்?"

"உஜ்வலா... நீ என்ன சொல்கிறாய்?" என்றான் சூர்யா பதற்றமாக.

"புரியவில்லையா, சூர்யா... ஒருவரிடம் அன்பு வைத்தால் அவருடைய நலன்தான் முக்கியம். உங்களை என் உயிராக நேசிக்கிறேன். அதனால் கல்யாணம் என்ற சடங்கில் பிணைந்து, உங்களை இழக்க என் மனம் சம்மதிக்காது. சரியோ, தப்போ... எனக்குக் கடவுள் பக்தி உண்டு, நம்ம ஜனங்கள் நிறைந்த உள்ளத்தோட ஆசீர்வதிக்காவிட்டால் நம்ம கல்யாணம் நிறைவு பெறாது. அதனால்..."

"அதனால் பரவாயில்லை, உஜ்வலா. வேறு எத்தனையோ வழிமுறைகள் இருக்கு... நாம் ஒன்று சேர..."

"மிஸ்டர் சூர்யா, உங்கள் நினைவுகளை என் உள்ளத்தில் பத்திரமாகப் பூட்டிவைத்து, அவ்வப்போது உங்களைத் தெய்வமாக நினைத்து ஆராதிப்பேன். உங்கள் நாட்டில் பதி பரமேஸ்வர் என்றுதானே கூறுகிறார்கள். தெய்வமும் தெய்வமும் உள்ளத்தால் ஒன்று சேர்ந்தால் சடங்கேது சம்பிரதாயமேது..." என்றவள் அவன் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு உள்ளே மறைந்தாள்.

"வர...
வர...
போலிச்சாமியார்
அட்டகாசம்
தாங்க
முடியலை.."
"என்ன
விஷயம்...?"



"யாரோ
ஒரு சாமியார்
'ஆசிரமத்துக்கு
பத்து இளம்
பெண்கள்
தேவை'ன்னு
பேப்பர்ல
விளம்பரம்
கொடுத்
திருக்கார்!"
- நெற்குப்பை
டி.மனோகரன்

11:29
35

ஸ்டிபானியையும் அப்பாவையும் சேர்ந்து பார்த்தது முதற்கொண்டு ஆண்டிக்கு ஒன்று நிச்சயமாய் விளங்கி விட்டது. அப்பா இனிமேல் இங்கே திரும்பி வரப் போவதில்லை என்பதுதான் அது.

மறுநாள் காலை உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது பேஜிடம் திடீரென்று ஒரு கேள்வி கேட்டான் : "ஏம்மா, ஆலி விழித்துக் கொண்டதும் அப்பா எங்கேன்னு கேட்பாளே? அப்ப நாம்ப என்ன பதில் சொல்றது?"

அந்தக் கேள்வி பேஜின் இருதயத்தை இரண்டாகக் கிழித்தது. பொங்கி வரும் கண்ணீரைக் குழந்தை பார்த்து விடக் கூடாது என்பதற்காகச் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டு ஜன்னலுக்கு வெளியே பார்க்கிற மாதிரி மூக்கைத் துடைத்துக் கொண்டாள். "ஏதாவது வழிசெய்யலாம்," என்றாள்.

"ஸ்டிபானி சாகணும்!" என்றான் ஆண்டி கோபத்துடன். அழுத்தந்திருத்தமாக அவன் அப்படிச் சொன்னதும் பேஜின் கண்ணீர் மறைந்தது. சிரிப்பு வந்தது. 'சீ, போக்கிரி!' என்று கையை ஓங்கியதும் ஆண்டி தோட்டத்துக்கு ஓடி விட்டான். இப்போது அவன் மனம் சிறிது மாறியிருந்தது. காரணம் –

அடிக்கடி அவர்கள் தாரென்ஸன் வீட்டுக்குப் போவதும் அங்கே சாப்பிடுவதுமாக இருந்தார்கள். அங்கே ஆண்டிக்கும் க்ளோவுக்கும் பாசம் வளர வழி ஏற்பட்டது. அக்கா இல்லாத ஏக்கத்தை க்ளோ மூலம் தீர்த்துக் கொண்டான் ஆண்டி.

அன்று அவர்கள் சாப்பாட்டுக்குப் பின் பேசிக் கொண்டிருந்தபோது, க்ளோ தழுதழுத்த குரலில், "ஆலி எப்போது உடம்பு குணமாகி வீட்டுக்கு வரப் போகிறாளோ? நாளுக்கு நாள் எனக்கு ரொம்பக் கவலையாக இருக்கிறது," என்றாள்.

அதே ஏக்கம்தான் எல்லார் மனத்திலும் இருந்தது. ஏற்கெனவே இரண்டு மாதம் ஓடி விட்டது. இரண்டொரு தரம் அசைகிற மாதிரி தெரிந்ததைத் தவிர ஆலிஸனிடம் வேறெந்த மாறுதலும் தென்படவில்லை. இப்படியே இன்னும் ஒரு மாதம் சென்றால் பிறகு என்னவாகும் என்று சொல்வதற்கில்லை. விபத்து நேரிட்டதிலிருந்து மூன்று மாதத்துக்குள் நினைவு திரும்பாவிட்டால், அப்புறம் நிரந்தரக் கோமாதான் என்று டாக்டர் ஹேமர்மேன் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்.

"நேற்று கடைவீதியில் பிலிப்பின் அம்மாவைப் பார்த்தேன். பாவம், மகனை இழந்த துக்கத்தில் இளைத்துத் துரும்பாய்ப் போய் விட்டாள்," என்றாள் பேஜ்.

தாரென்ஸன் பெருமூச்சு விட்டான். படித்துத் தேறிய மாணவர்களைப் பாராட்டி வழியனுப்பும் விழா பிலிப்பின் பள்ளிக்கூடத்தில் சில நாட்களுக்கு முன் நடைபெற்றது. பிலிப்பும் படிப்பை முடித்திருக்க வேண்டியவன்தான். அதற்குள் காலம் முடிந்து விட்டது. அவனுடைய மரணத்துக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் கூட்டத்தினர் ஒரு நிமிடம் நின்று மௌன அஞ்சலி செலுத்தினார்கள்.

தாரென்ஸனுக்கு அந்த நிகழ்ச்சி ஞாபகம் வந்தது போலவே க்ளோவுக்கும் வந்தது. தலையைக் குனிந்து கொண்டாள். விபத்து நேர்ந்த அந்தப் பயங்கர இரவை நினைக்கையில், ஜேமியைப் போலவே அவளுக்கும் குற்ற உணர்வு நெஞ்சைக் குத்தியது. 'அம்மாவுக்குத் தெரியாமல் வரச் சொல்லி நாம் அழைத்துப் போனதால் அல்லவா இப்போது ஆலிஸனுக்கு இந்த நிலைமை!' என்று அடிக்கடி நினைத்துக் கொண்டாள்.

வீடு திரும்புகையில் ஆண்டி சந்தோஷமாக இருப்பது போல் தோன்றியது. அம்மாவின் முகத்தை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன விஷயம்?" என்று பேஜ் சிரித்தாள்.

மூலம்: டேனியல் ஸ்டீல்



''பிஜானோட '

அப்பாவுக்கு உன்னை ரொம்பப் பிடிச்சிருக்காம். பிஜான் சொல்றான்," என்றான் ஆண்டி.

"அப்படியா? எதை வைத்து அப்படிச் சொல்கிறான்?'' என்று அக்கறையில்லாத மாதிரி கேட்டாள் பேஜ், மகனின் முகத்தைக் கூர்ந்து கவனித்தபடி. உள்ளுக்குள் ஒரு படபடப்பு ஏற்பட்டது. ஆண்டிக்குத் தாரென்ஸனைப் பிடிக்க வேண்டுமே என்று அவளுக்குக் கவலை.

"எதனால் சொன்னான்னு தெரியலே. நீயும் அவரும் பேசறதையும் சிரிக்கிறதையும் நிறையத் தடவை கவனிச்சானாம். நீ ரொம்ப அழகா இருக்கிறே, நல்லா பேசிப் பழகறேன்னு அவன்கிட்டே அவர் சொன்னாராம். ஒரு தடவை நீ அவருக்கு முத்தம் கூடக் கொடுத்தாயாமே? நிஜமாவா அம்மா?" என்றான் ஆண்டி. ஆனால் அதை ஒரு குற்றச்சாட்டாகச் சொல்லாமல் சாதாரணமாகத்தான் சொன்னான். ஸ்டிபானியும் அப்பாவும் பழகியதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்திருந்த அவனுக்கு, இப்போது புதியதோர் உலகத்தைக் கண்ட மாதிரி மகிழ்ச்சியாக இருந்தது.

பேஜுக்கும் இது புது உலகம்தான். ஆனால்

**தமிழில் :**
**ரா.கி. ரங்கராஜன்**

'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்

தாரென்ஸன்

உறவைப் பற்றி ஆண்டியிடம் எவ்வளவு தூரம் ஒப்புக் கொள்வது என்று தெரியவில்லை.

"வீட்டுக்குப் புறப்படுகிறபோது, குட்பை சொல்வேன் இல்லையா? அப்போது ஏதாவது நேர்ந்திருக்கும். ஆனால் அவரை எனக்குப் பிடித்திருக்கிறது," என்றாள்.

"அப்பாவைப் பிடிச்ச அளவுக்கு இவரைப் பிடிச்சிருக்கா?" என்று விடாமல் கேட்டான் ஆண்டி.

''அப்படிச் சொல்ல முடியுமா? இவர் ரொம்ப நல்ல சிநேகிதர். ஆலி ஆஸ்பத்திரியில் இருக்கிறதாலே எனக்கு அங்கே ரொம்ப உதவியாய் இருக்கிறார்," என்றாள்.

ஆண்டி அதைப் புரிந்து கொண்ட மாதிரி தலையாட்டினான்.

அடுத்த நாள் ஆஸ்பத்திரிக்கு வந்திருந்தான் பிராட்.

"எப்படி இருக்கிறீர்கள்?" என்று விசாரித்தாள் பேஜ், தன் மனச்சங்கடத்தை வெளிக் காட்டிக் கொள்ளாமல்.

''ஆலி எப்படி இருக்கிறாள்?'' என்று

கேட்டவன் அவன் படுக்கைக்கு அருகே சென்று கவனித்தான்.

"எந்த மாறுதலும் தெரியவில்லை. கொஞ்சம் கொஞ்சம் அசைகிறாள். கொஞ்சம் கொஞ்சம் முனகுகிறாள். ஆனால் அதற்கெல்லாம் ஏதாவது அர்த்தம் உண்டா என்று தெரியவில்லை," என்றாள் பேஜ். இருந்தாலும், அந்த அசைவுகளும் முனகல்களும் ஸ்கேனில் பதிவாகிக் கொண்டிருந்தன. 'ஆலி' என்று அவள் பெயரைச் சொல்லிக் கூப்பிடும்போது அசைவுகள் ஏற்பட்டன. அதற்கு நிச்சயமாய் அர்த்தம் இருக்கும். யாருக்குத் தெரியும்? இன்னும் ஆழ்ந்த மயக்கத்திலேயே இருக்கிறாள். இன்னும் கருவிகள் மூலம்தான் சுவாசித்துக் கொண்டிருக்கிறாள்.

மகளின் படுக்கையருகே ஐந்து நிமிடம் நின்றிருந்தான் பிராட். அவ்வளவுதான் எப்போதுமே அவன் எடுத்துக் கொள்ளும் நேரம். "உன்னுடன் கொஞ்சம் பேச வேண்டும். வெளியே போகலாம், வா," என்றான்.

ஐஸியூ அறையை விட்டு ஹாலுக்கு வந்தார்கள் இருவரும்.

"உனக்கு போன் செய்யக் கூட நேரமில்லை," என்றான் பிராட். பிறகு மன்னிப்புக் கேட்பவன் போலக் குரலைத் தாழ்த்திக் கொண்டு, "நாம் லாயர்களைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கிறேன்," என்றான். பேஜின் கண்களை நேருக்கு நேர் சந்திக்கவே அவனுக்குக் கஷ்டமாக இருந்தது.

"ஆமாம்," என்றாள் பேஜ். அதைச் சொல்லவே பிடிக்கவில்லை அவளுக்கு. அவர்களுடைய மணவாழ்க்கைக்கு இறுதி மணி அடிக்கப்படுகிறது என்பது புரிந்தது.

"இந்த வருட முடிவுக்குள் நாம் விவாகரத்து செய்து கொண்டு விடுவோம். முடிந்தால் கிறிஸ்துமசுக்கு முன்பே," என்றான் அவன். சட்டுப்புட்டென்று விவாகரத்து நடந்து முடிந்தால் கிறிஸ்துமஸ் சமயத்தில் தங்கள் திருமணத்தை வைத்துக் கொள்ளலாம் என்று ஸ்டிபானி அவனிடம் சொல்லியிருந்தாள்.

பேஜிடமிருந்து ஒரு பெருமூச்சு வெளிப்பட்டது. "சரி, நாளைக்கு என் லாயரைப் பார்த்துப் பேசுகிறேன்."

"தாங்க்ஸ்." அவன் எழுந்து கொண்டான். அவளிடம் இன்னும் ஏதோ சொல்ல நினைப்பது போல் தயங்கினான். ஆனால் என்ன சொல்வதென்று தெரியவில்லை. "ஸாரி பேஜ்," என்றான்.

"பரவாயில்லை" என்று சொல்லி விட்டுத் திரும்பிச் சென்றாள் பேஜ்.

வழக்கறிஞரைப் பேஜ் சந்தித்தபோது பிராடின் விருப்பப்படியே கிறிஸ்துமசுக்குள் விவாகரத்தை முடித்து விடலாம் என்று அவரும் சொன்னார். அன்று பூரா பேஜ் யந்திரகதியில் தன் அலுவல்களைச் செய்தாள். ஆண்டியிடம் கூட அதிகம் பேசாமல் தூங்கப் பண்ணினாள். தாரென்ஸனைக் கூப்பிடத் தோன்றவில்லை. பிராடிடமிருந்து பிரியவிருக்கும் அந்தக் கடைசி நிமிடத்தின் துன்பங்களை மௌனமாகப் பொறுத்துக் கொள்ள எண்ணினாள்.

அடுத்த நாள் தாரென்ஸனே அவளைத் தேடி வந்த போதுதான் லாயரைச் சந்தித்தது பற்றிச் சொன்னாள். அன்றிரவு வெகு நேரம் வரை அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள் – தங்களைப் பற்றி, தங்கள் வாழ்க்கைகளைப் பற்றி, தங்கள் குழந்தைகளைப் பற்றி, எதிர்கால நம்பிக்கைகளைப் பற்றி....

"பேஜ், உனக்கு ஒன்று சொல்லட்டுமா? மறுமணம் செய்து கொள்ளும் ஆசையை எனக்கு ஏற்படுத்திய முதல் பெண் நீதான்," என்றான் தாரென்ஸன்.

அவன் கண்களைப் பார்த்தபோது உள்ளத்தின் ஆழத்திலிருந்து அந்த வார்த்தையை அவன் சொல்கிறான் என்பது நிச்சயமாய்த் தெரிந்தது.

"கிறிஸ்துமஸ் வரட்டும்" என்றாள் குறும்புத்தனமாகக் கண் சிமிட்டியபடி.

தாரென்ஸன் ஆனந்தத்துடன் சிரித்தான்.

ஜூன் மாதத்தின் பிற்பகுதியில் பேஜின் வாழ்க்கை முறை மாறலாயிற்று.

"என்னய்யா கையிலே கேசட்?"

"நேற்று நம்ம ஏரியாவிலே குடும்பத் தகராறில் மனைவியைக் கொலை செய்து விட்டுத் தலைமறைவான அம்மையப்பன் அனுப்பியிருக்கிறான், அவனுக்குப் பொது மன்னிப்புக் கொடுப்பதாக நீங்க அறிவிச்சா சரண்டர் ஆகிறானாம்!"

– ப. இராம் முருகன்



ஆஸ்பத்திரியின் அவசர சிகிச்சைப் பிரிவில், ஒரு சுவரோவியம் வரையத் தொடங்கியிருந்தான் அவன். ஆலிக்காக இரண்டு ஓவியம் வரைந்து தருவதாக அவன் சொன்ன போது, ஆஸ்பத்திரி நிர்வாகிகள் மகிழ்ச்சியுடன் அனுமதி தந்தார்கள். ஒரு சித்திரம் இங்கேயும், இன்னொன்று வரவேற்பறைச் சுவரிலும் தீட்டுவதாகத் திட்டமிட்டிருந்தான் அவன். இந்த இரண்டும் முடிந்ததும் ஆண்டியின் பள்ளிக்கூடத்திலும் ஒன்று வரைய ஒப்புக் கொண்டிருந்தான்.

ஆலிஸன் கோமாவிலிருந்து விழித்தெழுவாள் என்ற நம்பிக்கையை அவன் சிறிது சிறிதாக இழந்து கொண்டிருந்ததால், இனி ஓவியத்தில் மனத்தைச் செலுத்த வேண்டியதுதான் என்று தீர்மானித்திருந்தான்.

அவனுடைய மனத்துக்குள் நிகழ்ந்து வந்த போராட்டம் நன்றாகவே தெரிந்தது தாரென்ஸனுக்கு. ஏனெனில் இப்போதெல்லாம் ஆலிஸனைப் பற்றியே அவன் அதிகமாய்ப் பேசினான். ஆலிஸன் செய்த விஷமங்கள்.... படிப்பிலும் விளையாட்டிலும் அவள் செய்த சாதனைகள்.... அவளுடைய பலம், பலவீனம்... இப்படி ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பது பேஜின் வழக்கமாயிற்று. ஆலிஸன் என்ற ஒரு பெண் இருப்பதையே எல்லாரும் மறந்து விடுவார்கள் என்று பயந்து, எல்லாருக்கும் அவளை நினைவுபடுத்துகிற மாதிரி இருந்தது பேஜின் பேச்சு.

அவனுடைய வேகமான நடவடிக்கைகளைக் கண்டு தாரென்ஸனுக்குப் பிரமிப்பாயிருந்தது. புதிய வாழ்க்கைக்குத் தயார் செய்து கொள்ள வேண்டி, பேஜ் மேலும் மேலும் கலைப் படைப்புக்களில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டான். பிஜானின் பள்ளிக்கூடத்துக்குக் காகிதக் கூழ் சிற்பங்களும் களிமண் பொம்மைகளும் செய்து தந்தான். சிறுவர்களுக்குச் சித்திரக் கலை கற்பித்தான்.

ஜூலை மாதத்தில் ஒரு ஞாயிறன்று அவன் தாரென்ஸனின் வீட்டில் ஆண்டியுடன் தங்கியிருந்தான். இப்போது கூட அவர்கள் இரவு வேளையில் ரகசியமாகத்தான் சந்திக்க வேண்டியிருந்தது. தங்கள் முடிவைக் குழந்தைகளிடம் சொல்லத் தைரியம் வரவில்லை.

"நம்மைக் கையும் களவுமாக க்ளோ பிடித்தால் அவ்வளவுதான்! உடனே ஆஸ்பத்திரிக்கு ஓடி, ஆலிஸனிடம் சொல்வதற்காக அவளை உலுக்கி எடுத்து உட்கார்த்தி வைத்து விடுவாள்," என்று தாரென்ஸனிடம் சமையலறையில் சொல்லிச் சிரித்துக் கொண்டிருந்தபோது –

ஊன்றுக் கட்டையை டொக் டொக் கென்று ஊன்றி நொண்டிக் கொண்டு வெகு வேகமாக அவர்களை நோக்கி வந்தாள் க்ளோ.

"சீக்கிரம் வாருங்கள்! ஒரு விசேஷம்! உடனே வந்து பாருங்கள்!" என்று அவள் அவசரமாகக் கூப்பிட்டதும் பேஜுக்கு என்ன வென்று புரியவில்லை. பிஜானோ ஆண்டியோ ஏதோ காயம் பட்டுக் கொண்டு விட்டார்களோ என்ற திகிலுடன் முன்னறைக்கு ஓடினான். தாரென்ஸனும் கவலையுடன் அவன் பின்னால் விரைந்தாள்.

முன்னறையிலிருந்த டெலிவிஷன் பெட்டியை க்ளோ சுட்டிக்காட்டிய போதுதான் புரிந்தது.

டெலிவிஷனில் என்ன பயங்கரக் காட்சி! கொடூரமான ஒரு கார் விபத்து!

செய்தி அறிவிப்பாளர் சொல்லிக் கொண்டிருந்தார்.

'இன்று பிற்பகல் நேருக்கு நேராக இரண்டு கார்கள் மோதிக் கொண்டன. ஒரு காரை ஓட்டி வந்தவர் செனெட்டர் ஹட்சின்ஸின் மனைவி லாரா. அவளுடைய பன்னிரண்டு வயதுப் பெண் பலத்த காயமடைந்தாள். ஆனால் உயிருக்கு அபாயமில்லை என்று தெரிகிறது. மற்றக் காரில் இருந்த நாலு பேரும் ஸ்தலத்திலேயே இறந்து போனார்கள். லாரா மிகுந்த குடி போதையுடன் காரை ஓட்டி வந்திருக்கிறார். அவரைப் போலீசார் கைது செய்திருக்கிறார்கள்....'

தடதடக்கும் இதயத்துடன் செய்தியைக் கேட்டுக் கொண்டு சிலையாக நின்றான் பேஜ். செய்தி வாசித்தவர் அவனையே பார்க்கிற மாதிரி கண்களை உயர்த்தி, தகவலைத் தொடர்ந்தார்.

'...சென்ற ஏப்ரல் மாதம் இதே போன்ற ஒரு விபத்தில் லாரா சம்பந்தப்பட்டிருந்தது நினைவிருக்கலாம். அப்போது லாரா ஹட்சின்ஸ் ஓட்டி வந்த கார் இன்னொரு காருடன் மோதியதில் ஒரு பையன் இறந்து போனான்.

நீதிபதி: உங்க கணவரை நீங்க டைவர்ஸ் பண்ண என்ன காரணம்?



நடிகை: என்னோட லட்சியமே நான் நடிப்புத் துறையிலே பிரபலமடையணும்கிறது தானே!''

– சீர்காழி வி. ரேவதி

# வல்கனோ

நெருப்பு, சுறாமீன், மலைப்பாம்பு, வேற்றுக்கிரக வாசிகள், பூகம்பம், டினோசர் என்று விதவிதமாக பயமுறுத்தும் ஹாலிவுட், இந்த முறை தேர்ந்தெடுத்திருப்பது எரிமலையை!

லாஸ் ஏஞ்ஜெல்ஸ் நகரம் வழக்கம் போல்தான் தன் காலை வேளையை அன்றும் துவக்குகிறது. கடைவாசல்கள் சுத்தம் செய்யப்படுகின்றன. வாக்கிங் போகும் நபர்கள். தோட்டத்தில் பூச்சிமருந்து அடிக்கப்படுகிறது. அந்தச் சமயத்தில்தான் ஒரு சின்ன அதிர்ச்சி – முதலில் பூமியில், தொடர்ந்து அந்தப் பகுதி மக்களின் மனத்தில்.

''ரொம்பச் சின்ன நிலநடுக்கம். இப்போ சரியாப் போச்சு'' என்கிறார்கள் டீ.வி.யில். ஆனால்... நகரின் அமைதியான நீர்நிலைகளில் ஆங்காங்கே கொந்தளிப்பு. பூமி அதிர்வை உணர்த்தும் கோடு தாறுமாறாகச் செல்லத் தொடங்குகிறது. எரிமலை வெடிக்கிறது – முழு பலத்தோடு.

தெருவெல்லாம் எரிமலைக் குழம்புகள் வெள்ளமாய்ப் பெருகுகின்றன. டப்டப்பென்று மேலே எகிறும் தீக் கோளங்கள். கட்டடம், கார் என்று எதெதன் மேலோ விழுந்து அவற்றை அழிக்கின்றன.



அதிகம் தெரிந்த ஒரே முகம் டாமி லீ ஜோன்ஸ். நகரின் அவசரச் சேவை மையத்தின் தலைவர். பொருத்தமான முகபாவங்கள். ஆனால் கிளைமாக்ஸில் ஓடிவந்து தன் மகளைக் காப்பாற்றிக் கரைசேர்ப்பது ஏதோ எம்.ஜி.ஆர். – ரஜினி சாகசம் போலிருக்கிறது.

நகரின் மொத்த அமைப்புக்களும் சேர்ந்து பெரும் கான்கிரீட் தூண்களை முக்கிய சாலையின் மையத்தில் அரண் போல வைத்து, எரிமலைக் குழம்பைத் தடுத்து, ஹெலிகாப்டர் மற்றும் தரைவழி தீயணைப்புச் சாதனங்கள் மூலம் சேதத்தைத் தொடவிடாமல் செய்யும் காட்சியும், வானளாவிய கட்டடம் ஒன்றைத் தகர்க்கும் காட்சியும் (அப்போதுதான் அதன் அருகே உள்ள சுரங்கப்பாதை வழியாக, பெருகிவரும் எரிமலைக் குழம்பைக் கடலில் செலுத்த முடியும்) வெகுசிறப்பாகப் படமாக்கப்பட்டுள்ளன.

– ஜி.

பதினைந்து வயதுப் பெண்கள் இரண்டு பேர் பலத்த காயமடைந்தார்கள்...'

'கடவுளே! கடவுளே!' என்று கூவிய வண்ணம் நாற்காலியில் பொத்தென்று விழுந்தாள் பேஜ். நாலு பேர் கொண்ட ஒரு குடும்பத்தையே கொன்று விட்டான் லாரா! குடி போதையில் இருந்ததற்காகக் கைது செய்திருக்கிறார்கள்!

''லாரா அன்றைக்கும் குடித்துத்தான் இருந்திருக்கிறான்! அன்றைக்கும் நாலு பேர் இறந்து போயிருக்க வேண்டும். மூன்று பேர் தப்பினீர்கள்...''

அவளும் க்ளோவும் வாய்விட்டு அழுவதைக் கண்டு தாரென்ஸன் டீ.வி.யை நிறுத்தினான். சற்றுப் பொறுத்து வேறொரு சேனலைத் திருப்பியபோது அங்கும் இதே காட்சி, இதே செய்தி. ஆனால் இப்போது செய்தி மேலும் பயங்கரமாக இருந்தது. பலியானது நான்கு உயிர் அல்ல. ஐந்து.

குடும்பத் தலைவன் – முப்பத்திரண்டு வயது; குடும்பத் தலைவி – இருபத்தெட்டு வயது; ஐந்து வயதுப் பையன்; இரண்டு வயதுப் பெண். அத்துடனில்லை. இறந்து போன குடும்பத் தலைவி எட்டு மாதக் கருவை வயிற்றில் சுமந்திருந்தாள். லாராவின் மகனுக்கு ஒரு கையில் முறிவு; கன்னத்தில் பதினைந்து தையல் போட்டிருந்தார்கள். லேசான வலிப்பு வேறே...

''இந்தத் தடவை செனெட்டரால் தன் மனைவியைக் காப்பாற்ற முடியாது,'' என்றான் தாரென்ஸன். ''ஐந்து உயிர்கள் பலி!''

''ஆறு,'' என்றாள் பேஜ், இறந்து போன பிலிப்பை எண்ணி. 'ஆலிஸனுக்கு ஏதாவது நேர்ந்தால் ஏழு' என்று நினைத்துக் கொண்ட போது அவள் உடம்பு நடுங்கியது.

பொழுது விடிந்து, ஆஸ்பத்திரிக்குப் போவதற்காக அவர்கள் புறப்பட்ட போது, வாசலில் பத்திரிகை, டெலிவிஷன் நிருபர்கள் ஒரு பட்டாளமாக நின்றிருந்தார்கள். நடந்த விபத்தைப் பற்றிக் கருத்துச் சொல்

லும்படி தாரென்ஸனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"ரொம்ப அதிர்ச்சியான விபத்து," என்று சுருக்கமாகச் சொன்னான் தாரென்ஸன். க்ளோவைச் சக்கர நாற்காலியில் உட்கார்ந்திருப்பது போல அல்லது ஊன்று கட்டையில் சாய்ந்து கொண்டிருப்பது போலப் புகைப் படம் எடுக்க வேண்டுமென்று அவர்கள் கேட்டார்கள். அதற்கு அனுமதி தரவில்லை தாரென்ஸன். பேஜுடன் காரில் புறப்பட்டு விட்டான்.

ஆஸ்பத்திரியை அடைந்தபோதுதான் பேஜுக்கு ஞாபகம் வந்தது. க்ளோவைப் படம் எடுக்க விரும்பியவர்கள் ஆலிஸனை மட்டும் விடுவார்களா? அந்த எண்ணம் ஏற்பட்டதும் புயல் வேகமாக ஆலிஸனின் அறையை அடைந்தான். அங்கே இன்னும் எந்த நிருபரும் வரவில்லை. நர்ஸ்கள் ஜன்னல் கதவுகளைச் சாத்திக் கொண்டிருந்தார்கள். யாரையும் அங்கே வர அனுமதிக்க வேண்டாமென்று பேஜ் சொன்னதை ஆஸ்பத்திரி நிர்வாகிகளும் ஒப்புக் கொண்டார்கள்.

லாராவைப் பற்றிச் செய்தி சேகரிக்கும்படி தாரென்ஸன் சொல்லியிருந்த நண்பரும் பல தகவல்கள் திரட்டி வந்து சொன்னார். குடிப் பழக்கத்தைப் போக்கிக் கொள்வதற்காக இது வரை லாரா நாலு ஆஸ்பத்திரியில் தங்கிச் சிகிச்சை பெற்றிருக்கிறாளாம் – வெவ்வேறு பொய்ப் பெயர்களில். ஆனால் பலன் ஏற்படவில்லை. அவளுக்கு நாற்பது வருட சிறைத் தண்டனை கிடைப்பது நிச்சயம் என்றார் அந்த நண்பர்.

அந்த வாரக் கடைசிக்குள் லாராவைப் பற்றியும் விபத்தைப் பற்றியும் பரபரப்பு உச்சக் கட்டத்தை எட்டியது. பிலிப்பின் பெற்றோர், ஜேமியின் பெற்றோர், பேஜ், பிராட், தாரென்ஸன் – எல்லாரையும் நிருபர்கள் துரத்தினார்கள். ஒரு டெலிவிஷன் நிலையத்தின் பெண் நிருபர் பேஜிடம் மன்றாடினாள். 'குடி போதையில் கார் ஓட்டுவது எவ்வளவு கொடுமையானது என்பதைப் பொது மக்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா? அதற்காக வேணும் கோமாவில் கிடக்கும் உங்கள் பெண்ணின் படத்தை டி.வி.யில் காட்ட வேண்டும்," என்றாள் அவள்.

பேஜ் திட்டவட்டமாக மறுத்து விட்டான்.

"அப்படியானால் நீங்கள் மட்டுமாவது பேட்டி கொடுங்கள்," என்று அந்தப் பெண் நிருபர் விடாப்பிடியாக வற்புறுத்தினாள். பேஜ் அதற்குச் சம்மதித்து, மூன்று மாதங்களுக்கு முன்பு நடந்த விபத்து, ஆலிஸனுக்கு நேர்ந்த காயம், இப்போது அவளுடைய நிலைமை ஆகியவை குறித்துச் சுருக்கமாகச் சொன்னான்.

"அந்த விபத்தினால் உங்கள் வாழ்க்கை வேறு எந்த வகையிலாவது பாதிக்கப்பட்டிருக்கிறதா? வேறு ஏதேனும் சிக்கல் ஏற்பட்டுள்ளதா?" என்று கேட்டான் அந்தப் பெண்.

தானும் பிராடும் பிரிந்திருப்பதை யார் மூலமோ இவள் அறிந்திருக்கிறாள் என்பது பேஜுக்குப் புரிந்தது. அதற்குப் பதிலளிக்காமல் மழுப்பிவிட்டு, "எங்கள் எல்லாருக்குமே இது சோதனையான காலம். சுதாரித்துக் கொண்டு வருகிறோம். இதுபோன்ற சோக முடிவுகளுக்கு ஜவாப்தாரியானவர்களைச் சட்டம் கடுமையாகத் தண்டிக்கும் என்று நம்புகிறேன்," என்று கூறிப் பேட்டியை முடித்துக் கொண்டாள்.

'என்ன பேட்டி கொடுத்து என்ன? ஆலிஸனிடம் என்ன மாற்றம் ஏற்படப் போகிறது? ஒன்றுமில்லை,' என்று நினைக்கையில் அவள் உள்ளம் கனத்தது.

டாக்டர் கொடுத்திருந்த மூன்று மாதக் கெடு முடிந்து, நாலாவது மாதம் ஆரம்பமாயிற்று.

(அடுத்த இதழில் முடியும்)



## ஐ.டி.ஐ. ஆசிரியர் தேர்வு:

'நாங்கள் அமைக்கிற உங்கள் அரசு திறந்த அரசாக (Open Government) இருக்கும்; எங்கள் நடவடிக்கைகள் உங்கள் பரிசீலனைக்கு உட்படும் வகையில் இருக்கும் என்று உறுதி கூறுகிறோம்!' - கடந்த தேர்தலின் போது தி.மு.க. கொடுத்த தேர்தல் வாக்குறுதி இது.

இந்த அடிப்படையில் ஆட்சிக்கு வந்த சில மாதங்கள் வரை கொடுத்த உறுதி மொழிக் கேற்ப அரசு செயல்பட்ட போது மனதுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. குறிப்பாக, ஊழலுக்கு இடம் கொடுத்த நாமினேட்டட் டெண்டர் முறையை ஒழித்த போதும், பணம் விளையாட வழி இல்லாத வகையில் ஆயிரக்கணக்கான ஆசிரியர்களுக்கு, வேலை வாய்ப்பு அலுவலக சீனியாரிட்டிப்படி வேலை கொடுத்த போதும் 'சபாஷ்' என்று வாய்விட்டுப் பாராட்ட வாய்ப்புக் கிடைத்தது. ஆனால் சமீப காலங் களில் கேள்விப்படும் சில செய்திகள் சங்கடப் பட வைக்கின்றன. உதாரணத்துக்கு இதோ :

தமிழகம் முழுவதும் உள்ள அரசு தொழிற் பயிற்சி நிலையங்களில் (ஐ.டி.ஐ.) இளநிலை பயிற்சி ஆசிரியர் பணிக்கான தேர்வு சமீபத்தில் நடந்தது. மொத்தம் 27 பதவிகள். வேலை வாய்ப்பு அலுவலக சீனியாரிட்டிப்படிதான் தேர்வு செய்ய வேண்டும் என்ற அரசின் உத்தர வையும் மீறி, சம்பந்தப்பட்டவர்கள் செயல் பட்டதால், தகுதியும் திறமையும் பெற்ற பலர் புறக்கணிக்கப்பட்டு, பெரும்பாலும் பணம் கொடுத்தவர்களுக்கே வேலை தரப்பட்டது என்று ஒரு குற்றச்சாட்டு. ஒரு இடத்துக்கு (post) கிட்டத்தட்ட ஒரு லட்சம் முதல் இரண்டு லட்சம் வரை பணம் விளையாடி இருப்பதாக பரவலாகப் பேசப்படுகிறது.

"நேர்காணல் பேட்டியின் போது பல தரப் பட்ட செய்திகளும் வதந்திகளும் காதில் விழுந் தன. ஆனால் அது போலெல்லாம் இந்த ஆட்சி யில் நடக்காது என்று நாங்கள் பந்தயம் கட்டிக் கொண்டோம். ஆனால் தேர்வு பெற்றவர் சந்தேகமும் தெளிவாக்கப்பட்டு, இந்த பணிக் கான தேர்வில் லட்சக் கணக்கில் பணம் விளை யாடியது முழுமையாக உறுதி செய்யப்பட் டுள்ளது!" என்று விழுப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்த வாசகர் ஒருவர் நமக்கு எழுதியிருந்தார்.

விவகாரத்தின் முழுப் பரிமாணத்தையும் அறிந்து கொள்ள, சென்னை சேப்பாக்கத்தில் உள்ள வேலை வாய்ப்பு மற்றும் பயிற்சித் துறை இயக்குனர் அலுவலகத்தைச் சுற்றி வந்தோம். எடுத்த எடுப்பில் யாரும் வாயைத் திறப்பதாக இல்லை. இப்போது இயக்குனராக இருக்கும் சத்பதி பற்றிப் பரவலாக நல்லபடிதான் சொல்கிறார்கள். ஆனால் இந்த இளநிலை ஆசிரியர் பதவிக்குத் தேர்வு செய்யும் அதிகாரம் இணை இயக்குனர்கள் மூவரைக் கொண்ட குழுவுக்குத் (panel) தான் உண்டாம். கைவினைப் பயிற்சி, வேலை வாய்ப்பு, உலக வங்கி ஆகிய விவகாரங்களைக் கவனிக்கும் மூன்று இணை இயக்குனர்கள்தான் இந்த நேர்காணலை நடத்தி ஆட்களைத் தேர்வு செய்திருக்கிறார்கள். ஒரு பதவிக்குப் பத்துப் பேர் என்ற விகிதத்தில் வேலை வாய்ப்பு அலுவலகம் ஆட்களை அனுப்பியிருந்தது. ஆக 27 பதவிகளுக்கு கிட்டத்தட்ட 270 பேர் வந்திருந்தனர்.

"நேர்காணலின் போது கணித்ததன் அடிப்படையிலும் வேலை வாய்ப்பு அலுவலக சீனியாரிட்டியைக் கணக்கில் கொண்டும்தான் பதவிகள் நிரப்பப்பட்டன. பல்வேறு தரப் பினருக்கு இட ஒதுக்கீடுகள் உண்டு. அவையும் சரியாகக் கடைப்பிடிக்கப்பட்டன. முன்பு இடைநிலை ஆசிரியர் தேர்வின் போது கையாண்ட சீனியாரிட்டி முறையை மட்டும் எடுத்துக் கொண்டு இதில் செயல்பட முடியாது. காரணம், இது போன்ற பதவிகளுக்கு நாங்கள் ஆட்களின் திறமையையும் சோதிக்க வேண்டியிருக்கிறது. தவிர இடைநிலை ஆசிரி யர் பதவிகள் ஆயிரக்கணக்கில் நிரப்பப்பட் டன. நேர்காணல் நடத்தி அத்தனை பேரையும் தேர்ந்தெடுப்பதற்கு மிக நீண்ட காலம் ஆகும் என்பதால், வேலை வாய்ப்பு அலுவலக

# சந்தேகத்தைக் களைவது முதல்வரின் கடமை!

களின் பட்டியல் தெரியவந்த போது கேள்விப் பட்ட வதந்திகள் ஐம்பது சதவீதம் உண்மை என்று புரிய வந்தது. மேலும் பல வகையில் விசாரித்துப் பார்த்தபோது, இருந்த கொஞ்சம்

சீனியாரிட்டியைக் கருத்தில் கொண்டே செயல் பட்டிருக்கலாம். ஆனால் இப்போது நாங்கள் 27 போஸ்டுகளுக்குத் தானே ஆட்களைத் தேர்ந்தெடுத்தோம். அதனால் மிகுந்த

கவனத்தோடு தேர்ந்தெடுத்தோம். அவர்களை யும் வேலை வாய்ப்பு அலுவலகம் அனுப்பிய 270 பேர்களில்தானே 27 பேரைக் தேர்ந் தெடுத்தோம். எனவே, பணம் விளையாடி

**'நாங்கள் அமைக்கிற உங்கள் அரசு திறந்த அரசாக (Open Government) இருக்கும்; எங்கள் நடவடிக்கைகள் உங்கள் பரிசீலனைக்கு உட்படும் வகையில் இருக்கும் என்று உறுதி கூறுகிறோம்!'**

இருக்கிறது என்றெல்லாம் சொல்வது கொஞ்சமும் சரியில்லை!'' என்று நம்மிடம் கூறினார் துறையின் மூத்த அதிகாரி ஒருவர்.

எனவே, இந்தப் பதவிக்கான தேர்விலும் எம்.எல்.ஏக்கள், அமைச்சர்கள் மூலமாகச் சிலர் சிபாரிசை பிரயோகித்திருக்கலாம். இந்தத் தேர் வின்போது, அமைச்சர் ஒருவரின் உறவினர் இந்த ஏரியாவில் அடிக்கடி சுற்றிக் கொண் டிருந்தார். நேரடிப் பேட்டியை நடத்திய மூன்று இணை இயக்குனர்களை முதல்வர் நேரடியாக விசாரித்தால், யாராவது 'பிரஷர்' கொண்டு வந் தார்களா? பணம் விளையாடி இருக்கிறதா என்பதெல்லாம் தெரிந்து விடும்!'' என்று சொன்னார் துறையின் இளநிலை அதிகாரி ஒருவர்.

கடைசியாக இயக்குனர் சத்பதியைச் சந் தித்தோம். "இந்தப் பணிக்கான தேர்வுகள் நூறு சதவீதம் நேர்மையாகவே நடந்தன. யாருடைய தலையீடும் கிடையாது. இந்த விஷயத்தில் நாங் கள் திறந்த புத்தகமாகவே இருக்கிறோம். நேர் காணலில் கலந்து கொண்டு தேர்வு பெறாத வர்கள் யாராவது ஆதாரத்தோடு என்னிடம் புகார் கொடுத்தால் தக்க நடவடிக்கை எடுக்கத் தயாராய் இருக்கிறேன்!'' என்றார் அவர்.

ஆனாலும், இதில் பணம் விளையாடி



ஆனால் கோட்டை வட்டாரத்தில் செல்வாக்குடன் விளங்கும் நபர்கள் பல சிபாரி சுகளைச் செய்ததாகத் தகவல்கள் சொல்கின் றன. "இண்டர்வ்யூவுக்குக் கடிதம் அனுப்பப் பட்டவுடன் எம்.எல்.ஏவையோ அமைச் சரையோ பிடித்து, 'எப்படியாவது வாங்கிக் கொடுங்கள்' என்று சொல்பவர்கள் உண்டு.

இருக்குமோ என்று சந்தேகப்படுகிறவர்களின் சந்தேகத்தைப் போக்க, முதல்வர் ஒரு ரக சிய விசாரணைக்கு ஏற்பாடு செய்து, முறை கேடுகள் நடந்திருக்கிறதா என்பதைக் கண் டறிய வேண்டும்.

— ப்ரியன்

படம்: அருண்

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பெ. பொன்ராஜ பாண்டி,
நியூ ராஜா ஸ்டோர் (மளிகை)
(வெள்ளைக்கண்ணு தியேட்டர் எதிரில்)
அரசரடி, மதுரை - 625 010.

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி,
அவ்வையார்பாளையம்.

? 'மத்தியில் ஐ.மு. அரசு கவிழ்ந்தவுடன் நாங்கள் ஆட்சி அமைக்கத் தயார்' என்று அத்வானி கூறியுள்ளாரே?

! இதிலென்ன பெருமை? தேர்தலைச் சந்திக்கத் தயார் என்று சொன்னால் நாமும் பாராட்டத் தயார். தி.மு.க. தவிர ஒரு கட்சியாவது சொல்லக் காணோம்!

● ஆரூர் அரசு, பவித்திரமாணிக்கம்.

? மழை பொழிய விஞ்ஞானம், ஆன்மிகம், சங்கீதத்தைப் பயன்படுத்தும்போது, அதை நிறுத்துவதற்கு வழியே இல்லையா...? (வீட்டைச் சுற்றித் தண்ணீர்... மிதக்கிறோம் ஐயா!)

! எப்போ மழையை நிறுத்த முடியாதோ, அப்போ அதைப் பொழிய வைக்கவும் மனித முயற்சியால் முடியாது என்று உணர்க.

● கி. பழனிசாமி, சென்னை - 59.

? ஓய் விக்கிரமாதித்தா! வேதாளம் கேட்கிறேன். திருதிருவென்று முழிக்காமல் பதில் கூறு! மருதநாயகம் படத்துக்கு இசையமைக்கப் போவது யார்?

! புதுசா வடக்கேயிருந்து ஆள் வரவழைச்சு சாம்பிள் எல்லாம் பார்த்துட்டு சரிப்படாதுன்னு மறுபடியும் இளையராஜாவிடமே போக யோசனையாம்... அவராகவே இருக்கணும்னு நான் வேண்டிக்கிறேன்... வேறு யாரும் அதை உருப்படியாச் செய்ய முடியாது.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? தமிழகத்தில் கம்யூனிஸ்ட் கட்சிகள் இணைந்து செயல்பட வேண்டும் என்று சங்கரய்யா சொல்லியிருக்கிறாரே...?

! ஆரோக்கியமான அழைப்பு. இது சாத்தியமானால் தரமான மூன்றாவது அணி, மாநிலத்துக்குக் கிடைக்கக்கூடும்.

● சுப்பு வேதையா சித்திரவேலு,
கருப்பம்புலம்.

? இன்னும் எத்தனை முறை ஐ.மு. அரசை கேசரி மிரட்டுவார்?...

! ஆட்சியில் ஐ.மு. இருக்கும் வரை... அல்லது காங்கிரஸ் தலைவராக கேசரி இருக்கும் வரை.

● சு. கோபி, சென்னை - 109.

? பிரார்த்தனைக்கு முக்கியத்துவம் கொடுப்பதுண்டா...?

! ஓ. எஸ்! நமக்காக நாம் செய்து கொள்ளும் பிரார்த்தனையை விட பிறருக்காகச் செய்யும் பிரார்த்தனைக்கே சக்தி அதிகம் என்று நம்புவதால்.

● பெ. பொன்ராஜ்பாண்டி,
மதுரை - 10. ❑

? ஒரு பத்திரிகையாளர் செல்லும் இடத்துக்கு அதிரடிப்படையினரால்



# கௌதமி அரசியலுக்கு வருகிறாராமே..?

• அவசர பிரார்த்தனை!



• 'தமாஷ்' நிலை!



• எதிர்பார்ப்பு!



• ஆரோக்ய அழைப்பு!



• குற்றவுணர்வு

செல்ல முடியாதது ஏன்...?

! அதிரடிப்படையினர் வீரப்பனைக் காட்டில் தேட வேண்டும்; பத்திரிகையாளரோ தேட அவசியமின்றி அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார். அதிரடிப்படைகளுக்குக் கண்ணி வெடிகளால் ஆபத்து உண்டு. எனவே நிதானம் காட்ட வேண்டும். பத்திரிகையாளர் அபாயமற்ற பாதையில் அழைத்துப் போகப்பட்டிருப்பார்.

● ஜே. கண்ணன்,
சென்னை – 101.

? இந்தியாவின் தேசிய விலங்கு புலி; பறவை மயில்; தொழில்...?

! கவிழ்ப்பு!

● ந. மகராசன்,
கடமலைக்குண்டு.

? 'சமூகம் இவ்வளவு மோசமாக இருக்கும்போது நாம் இப்படிச் சிரிக்க வைக்க நினைக்கிறோமே என்ற குற்றவுணர்வு ஏற்படுகிறது...' என ரஜினிகாந்த் கூறியிருப்பது பற்றி...?

! சமுதாயத்தின் அவலங்களை எண்ணியே சிரிக்க வைப்பதில் தவறில்லை... அது கூடவே சிந்திக்கவும் வைக்கும். பிரச்னை என்னவென்றால், சமுதாயம் என்பதாக ஒன்று இருப்பதையே மறந்து விட்டுத்தான் படம் எடுக்கிறார்கள்!

● தேனி முருகேசன், தேனி.

? நெல்லை அ.தி.மு.க. மாநாடு அரசியல் திருப்பத்தை ஏற்படுத்தும் என்று வை.கோ. கூறியிருக்கிறாரே...?

! ஆமாம். கண்ணப்பன், முத்துசாமி, அரங்கநாயகம் போன்று பிரிந்தவர்கள் பலர் அபவுட்டர்ன் அடித்துத் திரும்பியதே ஒரு சாட்சியாகி விட்டதே!

● என். தாமோதரன், சேலம் – 6.

? இப்போதுள்ள நிலையில் நாட்டைத் திருத்த பெரியார் மாதிரி ஓர் அதிரடி பகுத்தறிவுவாதி, காந்தி மாதிரி ஓர் அஹிம்சைவாதி, காஞ்சி முனிவர் மாதிரி ஒரு சாந்தமான ஆன்மீகவாதி... இவர்களில் யார் தேவை என்று நினைக்கிறீர்கள்?

! இவர்களெல்லாம் போதாது. கூடவே நேர்மையான அரசியல்வாதிகள் நிறைய வேண்டும்.

● ஷோபனாதாசன், நாட்டரசன்கோட்டை.

? ஏழை எளிய மக்களுக்கு உதவ அரசியலில் ஈடுபடுவேன் என்று நடிகை கௌதமி கூறியுள்ளாரே...?

! An idle mind is the devil's workshop என்று சும்மாவா சொன்னார்கள்! கௌதமிக்கு ஒரு அக்கா வேஷமாவது உடனடியாகக் கிடைக்கக் கூட்டுப் பிரார்த்தனை செய்வோமாக!

• இருக்கும் வரை மிரட்டல்!



• அபவுட்...

● ப. ராமகிருஷ்ணன்,
ஆவணத்தாங்கோட்டை.

? 'கால் காசானாலும் கவர்மெண்ட் உத்தியோகம்' என்ற மனப்பான்மை எப்போதுதான் நம் இளைஞர்களை விட்டகலும்?

! உழைப்பை நம்புகிறபோது; உழைக்கத் தயாராய் இருக்கிறபோது.

● கே. எம். ஸ்வீட் முருகன்,
கன்னிக்கோட்டை.

? 'தி.மு.க. ஆட்சி கலைக்கப்பட்டால் அடுத்து ஆட்சி அமைக்கப் போவது நாம்தான்' என்று ஜெ. கனவு காண்பது சரியா?

! கனவு காண்பதற்குக் கடிவாளமே போட முடியாது. அது நனவாகாமல் காப்பது தி.மு.க.–த.மா.கா. நல்லுறவைப் பொறுத்துத்தான் அமையும்.



• ...டர்ன்...!

● மு. இரவிச்சந்திரன்,
சேலம் – 9.

? நீதிபதி ஜெயின் உருவ பொம்மைகளை தி.மு.க.வினர் எரித்தது சரியான செயல்தானா...?

! கட்சித் தலைமையின் கவனத்தை ஈர்க்க அங்கங்கே இருக்கிற குட்டித் தலைவர்கள் தூண்டிவிட்டுச் செய்த காரியமே இது. இதெல்லாம் வேலையில்லாத வீண் வேலை என்பதை கருணாநிதி, அன்பழகன் இருவருமே உணர்ந்திருக்கிறார்கள்.



• கடிவாளமில்லை!



## வட்டமேஜை:

# ஐயப்பனின் நெய் பிரசாதம் மாதிரி...




✉ படாடோபம் பக்திக்கு எதிரானது என்பதைப் பாபா பக்குவமாக உணர்த்தி விட்டார்; தங்க ரதம் போன்றதை விற்றுக் கிடைக்கும் பொருளி லிருந்து மக்களுக்கு மிகவும் தேவையான குடிநீர், உணவு, கல்வி, வைத்தியம் ஆகியவற்றை வழங்குவதே தமக்கு விருப்பமான செயல் எனத் தெளிவாக்கியுள்ளார்; மக்கள் தொண்டுதானே மகத்தான தொண்டு!

பொறையாறு,
கங்கா கணேசன்.

✉ அத்திப் பழங்களில் நல்ல பழத்தைத் தேடி எடுப்பதைப் போல நமது அரசியல் கட்சிகளிடையே நல்ல கட்சியைத் தேடியிருப்பது அருமை. ஆனாலும் அம்மையாரின் அறிக்கைக்கெல்லாம் முக்கியத்துவம் கொடுத்துத் தலையங்கம் எழுதுவது டூ மச்!

தூத்துக்குடி, கே. சுதர்ஷன்.

✉ தலையங்கம் நல்ல வினாசல்!

சென்னை-78,
வி.எஸ். கணேசன்.

✉ சிரிப்போடு சேர்ந்து சிந்தனையைத் தூண்டுகிற விதத்தில் கமெண்ட்ஸ்' அப்படி ஒரு கச்சிதம்! ('ஸ்டில்லைப் பார், சிரி')

கும்பகோணம்-1,
ஆர். ஷண்முகம்.

✉ கார்ப்பரேஷனில் ஊழல்களை ஒடுக்கக் கடவுள் ஒன்றும் வரத் தேவையில்லை. மேயர் மனசு வைத்தாலே நடக்கும். தலை(மை) சரியாயிருந்தால் வால் ஆடாது...!

நாகூர்-2, ஏ. காதர்.

✉ வை.கோ.வுக்கு எந்தச் சின்னம் கிடைக்கும் என்ற கேள்விக்குத் 'தராசு' அளித்த பதில் வயிறு குலுங்கும்படி வாய் விட்டுச் சிரிக்க வைத்தது! சரியான கிண்டல்கார ஆசாமி நீர்!

சென்னை-1,
கே.ஆர். ரவீந்திரன்.

✉ 'ரட்சகன்' பட விமர்சனத்தில் எந்தவித தூக்கலோ, இறக்கமோ இல்லாமல் உள்ளதை உள்ளவாறே கூறியுள்ளீர்கள். பாராட்டுக்கள்.

தக்கோலம், அ. முஸ்தபா.

✉ என்.வி.என். சோமு பற்றிய கருத்துப்படம் நெகிழ வைத்து விட்டது!

அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

✉ 'என்ன தோணுதோ அதை எழுது' என்ற தந்தை மதன் கேப்ரியலின் வார்த்தைகளில், மகன் டயானாவின் மீது அவர் வைத்திருக்கும் அசாத்திய நம்பிக்கை - தந்தை - மகன் உறவு எப்படி இருக்க வேண்டும் என்பதைச் சான்றுரைத்தது!

அரசரடி, நெல்லை வி. சிவா.

✉ நம்பியார் கடந்த பதினைந்து வாரங்களாகத் (போதாதுதான்) தம் அனுபவங்களை மனம் விட்டுப் பகிர்ந்து கொண்டது, ஐயப்பனின் நெய் பிரசாதம் மாதிரி மணம் வீசியது!

சென்னை-39, சிம்மவாஹினி.

✉ இன்னும் நிறைய விஷயங்களை 'நான் வில்லன் அல்ல!' தொடரில் எம்.என். நம்பியார் பகிர்ந்து கொள்வார் என்று எதிர்பார்த்தோம்! ஏமாற்றமே மிஞ்சியது!

நெய்வேலி-3, சு. ஸ்ரீகாந்த்.

✉ 'நான் வில்லன் அல்ல' நம்பியாரின் தொடர் அவரைப் பற்றிய நுணுக்கமான விஷயங்களை அறிந்து கொள்ள உதவியது. வாழ்க்கையின் ரசனையான சுவைகளுக்கு அதிக முக்கியத்துவம் தந்து அதை, அதே ரசனையுடன் அனுபவிப்பவர்கள் வெகு சிலரே. அதில் நம்பியார் அவர்கள் 'கதாநாயகனாகவே' இருந்தார் என்பதைப் பார்க்கும் போது வியப்பாகவே இருந்தது.

சென்னை, ஆரெஸ்.பிரபு.

✉ ஒரு நாணயத்திற்கு இரு பக்கங்கள் இருப்பது போன்று, நம்பியார் அவர்களும் திரையில் வில்லனாகவும், நிஜ வாழ்வில் ஒரு கதாநாயகனுக்குரிய குணங்களோடும் வாழ்ந்து வரும் அவரது இன்னொரு புறத்தையும் அறிந்து கொள்ள உதவியது கட்டுரைத் தொடர்.

சிதம்பரம்-1, ஜி. துளசி.

# கண் சிமிட்டும் நேரத்தில் உங்கள் குழந்தை வளர்ந்து விடுவாள்



# அதே வேகத்தில் உங்கள் பணம் வளர்ந்திட

KVB

# திருமகள் திருமணத் திட்டம்



காலங்கள் மாறினாலும் சில கடமைகள் மாறுவதில்லை. உங்கள் செல்ல மகளின் திருமணம்—உங்கள் தலையாய கடமைகளில் ஒன்று. அதற்கு கரூர் வைஸ்யா வங்கியின் திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்வதே நன்று.

இந்திய தனியார் வங்கிகளுள் முதலாவதாகத் தேறியுள்ள கரூர் வைஸ்யா வங்கியின் நூறு சதவீத பாதுகாப்புடன்!

இன்றே திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்யுங்கள். உங்கள் மகளின் திருமணத்தை நிறைவாக நடத்துங்கள்.




Since 1916

**கரூர் வைஸ்யா பாங்க் லிட்.**

கரூர் – 639 002

A.D.நவநீதன்
சேர்மன்

**நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி**

Anugrah 2484/97 Tam





# ஜானகிராமன்

ஆஞ்சநேய பக்தரான சுந்தர்ராஜன் தன் அண்ணன் மகன்களான கவுண்டமணி, சரத்குமாரை தீவிர பிரம்மச்சாரிகளாக வளர்க்க நினைக்கிறார். ஆனாலும் அவர்கள் இருவரும் திருமண வலையில் சிக்குவதோடு சுந்தர்ராஜனும் சிக்கிக் கொண்டு விடுகிறார்.

காமெடியே படத்தின் பலமென்பதால் சரத்தின் இமேஜுக்காகத் திணிக்கப்பட்ட சண்டைக் காட்சிகளும், ரம்பாவின் இமேஜுக்காக (அதாவது அவர் வில்லியாகி விடக் கூடாதென்பதற்காக) திணிக்கப்பட்ட சோக ஃப்ளாஷ்பாக் காட்சிகளும் அலுப்பை ஏற்படுத்துகின்றன. இவர்களோடு நக்மாவும் வந்து போகிறார்.

ஆஞ்சநேயர் வேஷம் தாங்கி சரத்தை திருமண பந்தத்தில் சிக்க வைக்கிறார் மணிவண்ணன். ஆஞ்சநேயரை ஏகத்துக்குக் கிண்டலடித்து விட்டுக் கடைசியில் 'அனுமார் வேஷம் போட்டு ஏமாத்தினதால்தான் இந்த தண்டனை' என்று, அவரையும், மற்றவர்களையும் பேசவிட்டு, தெய்வ நிந்தனையைச் சமானிக்கிறார்கள்.

இதை விடவும் மன்னிக்க முடியாத பெரும் தவறு உண்டு. தன் இரு மகன்களில் ஒருவரையாவது சரத்தின் தலையில் கட்ட முயற்சி செய்கிறார் மணிவண்ணன். இதற்காக இருவரையும் ரொம்பவும் ஊக்குவிக்க, 'கிணற்றில் குதிக்கிறேன், காப்பாற்றுவார், நனைந்திருப்பேன், காதல் வரும்' என்கிற ரீதியிலான மகன்களின் ஐடியாக்களை சீர் தூக்கிக் கருத்துக் கூறும் மணிவண்ணனின் பாத்திரம் - நகைச்சுவைக்காக என்றாலும் - அபத்தத்தின் உச்சம்.

கல்யாண வீட்டில் ஆள் மாறாட்ட காட்சியும், கோவிலுக்குத் தற்செயலாக வந்துவிடும் இரு 'மனைவி'களையும் சந்திக்க விடாதிருக்க சரத் எடுக்கும் 'வீரா'ப்பு உத்திகளும் கலகலப்பு. கிளைமாக்ஸ் (சண்டை) நடக்குமிடத்துக்கு வெவ்வேறு வண்டிகளில் ஏறி நகைச்சுவைப் பட்டாளம் கிளம்புகிறது. வழியிலும் சுவையான காமெடி கிடைக்குமென எண்ண வைக்கிறார்கள். கிடைப்பது ஏமாற்றம்.

ஹீரோவுக்கு ஈடாக மட்டுமல்ல; அவரைவிட அதிக வசனமும் (இருவரும் தோன்றும் காட்சிகளில்) கவுண்டமணிக்குத்தான். அதே சமயம் ஆயிரம்தான் செவிப்பறை பழுதுபட்டாலும் மற்றவர்களைவிட கவுண்டமணியின் நகைச்சுவைதான் எடுபடுகிறது என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும்.

— ஜி.



" 'கல்கி'யும் 'அமுதசுரபி'யும் இலவசமா கிடைக்க வழி இருக்கா?"

"ஓ இருக்கே! 5 வருஷத்துக்கு, வாரா வாரம் 'கல்கி'யும், மாதா மாதம் 'அமுத சுரபி'யும் உங்க வீடு தேடி வரும்!"

"கிண்டல் பண்ணாதீங்க சார், நெசமாத்தான் கேட்கறேன்!"

"நானும் உண்மையாத்தான் சொல்றேன். நீங்க பத்தாயிரம் ரூபாயை ஸ்ரீராம் டிரஸ்ட்டுல டெபாசிட் பண்ணிட்டாப் போதும். அஞ்சு வருஷத்துக்கு 'கல்கி'யும், 'அமுதசுரபி'யும் உங்க வீட்டுக்கே வருது. தவிர, பத்தாயிரம் ரூபா டெபாசிட்டை, இருபதாயிரம் ரூபாயாக திரும்ப வாங்கிக்கலாம்.

தவிர, 5 வருஷத்துக்கு 'கல்கி தீபாவளி மலர்' மற்றும் 'அமுத சுரபி தீபாவளி மலர்' பதிவுத்தபாலில் உங்களுக்கு கிடைக்கும்."

ஸ்ரீராம் டிரஸ்ட், 7-A இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை – 600 102. முகவரிக்கு டிராஃப்ட், அல்லது செக் அனுப்பவும்.

✂ – – – – – – – – – – – – – – – – – – – – – – – – – – – ✂

1. முழுப்பெயர்: திரு/திருமதி/செல்வி: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

..............................................

2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்: ..............................

முழுப்பெயர்: ..............................................

3. வாரிசுதாரர்: ..............................................

4. 'கல்கி', 'அமுதசுரபி' இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி: ............

..............................................

CHEQUE / D.D. No.....................DT...........................ON..............................

இடம்: ..............................................      அன்புள்ள

தேதி : ..............................................

முதலீட்டாளர் கையொப்பம்




'ஸ்ரீராம் டிரஸ்ட்',
ஏ-7, இரண்டாவது அவென்யூ,
அண்ணாநகர் கிழக்கு,
சென்னை - 600 102.
தொலைபேசி எண் : 628 6869, 628 7879



# இரவோடிரவாக 27,000 கோடி ரூபாய்!

இந்திய ரூபாயின் மதிப்பு பரிதாபமாகச் சரிந்ததைக் கண்டு நாடே அதிர்ந்துதான் போயிருக்கிறது. நிதியமைச்சரும் நிதித்துறைச் செயலரும் நிலவரம் அப்படியொன்றும் கலவரமாய் இல்லை என்று உத்தரவாதம் அளிக்கிறார்கள். 'இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படை இன்னமும் பலமாகத்தான் இருக்கிறது...' என்று அடித்துச் சொல்கிறார்கள்.

'குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டலை' என்கிற கதைதான் இது.

ஒரு சில வாரங்களுக்கு முன், தெற்காசிய நாடுகள் பலவற்றின் நாணயம் சடாரென்று மதிப்பிழந்ததைக் குறிப்பிட்டிருந்தேன். (அதனால் சர்வதேச பங்குச் சந்தையிலும் பங்குகளின் விலை வீழ்ந்தது.) தாய்லாந்து நாட்டு பட் (Baht) நாற்பது சதவிகிதம் மதிப்பிழந்தது. இந்தோனேஷியா, மலேசியா, ஹாங்காங் போன்ற வேறு சில நாட்டு நாணயங்கள் 25 முதல் 40 சதவிகிதம் வரை மதிப்பிழந்தன. மலேசிய பிரதமர் மிகவும் கவலையுற்று, இந்த வீழ்ச்சிக்கு சர்வதேச நாணய வியாபாரிகள் தான் காரணம் என்று குற்றம் சாட்டினார்.

இந்த கலாட்டாவெல்லாம் நடந்தபோது நமது ரூபாய் மட்டும் ஆட்டம் காணாமல் தன் பாட்டுக்கு இருந்தது. ரூபாயைக் கொண்டு அயல்நாட்டு நாணயங்களை மார்க்கெட் விலைக்கு வாங்கும் வசதி நமது நாட்டில் இன்னமும் முழுமையாக்கப்படவில்லை என்பதாலும் ரிசர்வ் வங்கியின் முன்னெச்சரிக்கை நடவடிக்கையினாலும் இது சாத்தியமாயிற்று என்றும் தெரிவித்திருந்தேன்.

இப்போது அந்தப் பாதுகாப்பெல்லாம் என்னவாயிற்று? ஒரு அமெரிக்க டாலருக்கு 36 ரூபாய் என்று இருந்த மதிப்பு, 39 ரூபாய் என்கிற அளவுக்குச் சரிந்தது ஏன்...? என்கிற கேள்வி எழுந்திருக்கிறது.

இதற்குக் கூறப்படும் ஒரு காரணம்: 'அமெரிக்காவில் நிலவும் பணவீக்க சதவிகிதம் குறைவு. நமது பணவீக்க விகிதமோ மிக அதிகம். இந்த இடைவெளி அதிகரிப்பினால் தான் ரூபாய் மதிப்பு குறைந்து போயிற்று' என்கிறார்கள். இது மெய்யானால், 'நமது பணவீக்கம் மூன்று சதவிகிதமாகக் குறைந்து விட்டது' என்று மூச்சுவிடாமல் தம்பட்டமடித்து வரும் அரசாங்கத்தின் வாக்கையும், ரிசர்வ் வங்கியின் அறிக்கையையும் என்ன வென்பது...?

ரூபாய் இப்படி திபுதிபுவென்று மதிப்பிழந்ததற்கு வேறெதேனும் மறைமுகமான காரணமிருக்கிறதா? என்பதை ஆராய்ந்தால் மட்டும் போதாது. இந்தப் போக்கினால் நமக்கு ஏற்படப் போகிற மாபெரும் நஷ்டத்தையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நாம் இறக்குமதி செய்கிற பொருள்களுக்குக் கூடுதலான ரூபாய்களைத் தர வேண்டியிருக்கும். உதாரணமாக பெட்ரோலிய கச்சா எண்ணெய். ஏற்கெனவே நமது ஆயில் பூல் கணக்கு பயங்கர குளறுபடியில் இருக்கிறது. இனி, வாங்கும் ஒவ்வொரு சொட்டு கச்சா எண்ணெய்க்கும் கூடுதல் ரூபாய் தர வேண்டுமென்றால் அந்தப் பளுவும் நம் தலையில்தான் விடியும் - பெட்ரோலிய பொருட்களின் விலை உயரும்! இறக்குமதி செய்யப்படும் இதர பொருட்களின் விலையும் கூடித்தான் போகும்.

இன்னொரு பெரிய மண்டையடி - நமது அன்னியக் கடன்களின் மதிப்பு, சுமார் 90 பில்லியன் டாலர். ரூபாய் மதிப்பிழந்ததன் காரணமாக, நமது அன்னியக் கடன் பாக்கிக் கணக்கில் 27,000 கோடி ரூபாய் கூடுதலாகச் சேர்ந்திருக்கிறது! இரவோடிரவாக ஒரு நாட்டின் கடன் சுமையில் 27,000 கோடி ரூபாய் கூடினால் அந்த நாட்டின் கதி என்னாவது! இந்தச் சுமையை யார் எப்படித் தாங்குவார்கள்...?

'ஜப்பான் போன்ற நாட்டில் கூட ஒரு மிகப் பெரிய ஷேர் வர்த்தக நிறுவனம் ஆட்டம் கண்டிருக்கிறது...' என்று நாம் சமாதானப்பட்டுக் கொள்வது சரியாகாது. மத்திய அரசின் ஸ்திரமின்மையினால் பங்குச் சந்தையில் பங்குகளின் விலை வேண்டுமானால் குறையலாம். ஆனால் ரூபாய் மதிப்பிழப்பதற்கும் அதுவே முக்கிய காரணமாக முடியாது.

நம்பக்கூடிய காரணமாக இதுவரை எதுவும் தெரிவிக்கப்படவில்லை.

நம் நாட்டு ஏற்றுமதியாளர்கள் பாடு கொண்டாட்டம். ரூபாய் மதிப்பு குறைந்ததால் அவர்கள் அடையக்கூடிய லாபம் அதிகரிக்கும் என்று ஆறுதல் சொல்கிறார்கள். ஆனால் அதனால் ஏற்றுமதி அதிகரித்துவிடப் போவதில்லையே!

நிதியமைச்சகமும் ரிசர்வ் வங்கியும் பிரச்னையில் தீவிர கவனம் செலுத்தி, நமது பொருளாதாரம் சரியான திக்கில்தான் செல்கிறதா என மறுபரிசீலனை செய்ய வேண்டும். ●

— வி. கோபாலன்

# ஆலோசனை

“டாக்டர்!”

“ஓ, மிஸ்டர் குமாரா? சென்னையின் வி.ஐ.பிக்களில் ஒருவர் என்னைத் தேடிவர நான் கொடுத்து வச்சிருக்கணும். என்ன சாப்பிடறீங்க, லெமன் டீ?”

“நோ தாங்க்ஸ். பை தி வே, மனவியல் மருத்துவரிடம் வரவங்க கொடுத்து வச்சவங்க இல்லேன்றது என் கருத்து.”

“சைகிரியாட்ரிஸ்ட் என்பவன் யாரு? ஒரு சுமைதாங்கி மனபாரத்தை இறக்கி வைக்கலாம். ஒரு நல்ல நண்பன் – சரியான பாதை காட்ட உதவுவான். மற்றபடி இதிலே குற்ற உணர்ச்சிக்கே இடமில்லே.”

“ஒக்கே டாக்டர்... நானும் சுதாவும் பேசிக்கிட்டே ஒரு மாசமாச்சு.”

“அதாவது உங்களுக்கும் உங்க மனைவிக்குமிடையே ஏதாவது பிரச்னைன்னு சொல்ல வரீங்களா?”

“ஆமாம். அப்பா அம்மாவின் பலத்த எதிர்ப்பையும் மீறி ஒரு லட்சிய வெறியோடுதான் சுதாவைக் கல்யாணம் செய்துக்கிட்டேன். ஆனா நான் எதிர்பார்ப்பது அவளது மென்மையான அன்பைத் தானே தவிர, ஆக்கிரமிப்பை அல்லன்றதைப் புரிஞ்சுக்க மாட்டேங்கிறா. போன மாதம் கூட ஒரு முக்கிய கான்ஃபரன்ஸிலே கலந்துக்கிட்டப்போ செல்போனிலே ‘உங்க தலைவலி எப்படி இருக்கு?’ன்றா!”

“அவங்களுக்கு நீங்க கான்ஃபரன்ஸிலே இருக்கீங்கன்றது எப்படித் தெரியும்? ஒரு பரிவு உணர்ச்சிதானே!”

“அப்படியில்லே. அதற்குப் பத்து நிமிடம் முன்னே தான் நானே அவளுக்கு போன் செய்து, ‘தலைவலி சரியாயிடுச்சு. அடுத்த ஒரு மணி நேரம் ஆபீசில் ஒரு முக்கிய டிஸ்கஷனில் இருப்பேன்’னு சொல்லியிருக்கேன். அப்படியும்! அலுவலக வேலையா மாதத்துக்கு மூணு நாளாவது நான் வெளியூர்களுக்குப் போக வேண்டியிருக்கும். அப்போதெல்லாம் இவ தெருவுக்கு வந்து கையசைக்கும் போது கண்கலங்கி விசித்து அழுது, ஒரு ஸீன் கிரியேட் செய்துடுவா. எங்க அவென்யூ மொத்தமும் இதைக் கிண்டலாப் பார்ப்பாங்க. பொஸசிவா இருந்து என்னை அவ முழுமையாக ஆளப் பார்ப்பது ஏதோ மலைப் பாம்புகிட்டே அகப்பட்டுக்கிட்ட உணர்வைத் தான் உண்டாக்குது. சிறு வயதிலிருந்தே சுதந்

தரத்தோடு வளர்க்கப்பட்டவன் நான். என்னை யாரும் கட்டிப் போடுவதை நான் விரும்பவில்லை - அன்புச் சங்கிலியால் கூட!''

''உங்க பின்னணியைச் சொல்லிட்டீங்க. உங்க மனைவி எந்த மாதிரி சூழலில் வளர்க்கப்பட்டாங்கன்றது உங்களுக்குச் சரியாத் தெரியுமா?''

''ஓ! அவளும் பணக்காரச் சூழலில் சுதந்தரத்தோடு வளர்க்கப்பட்டவதான். சின்ன வயசிலேயே அவ அப்பா - அம்மா ஒரு விபத்தில இறந்துட்டதால அவளுடைய சித்தப்பாவும், அண்ணன்களும் அவளுக்கு நிறைய செல்லம் கொடுத்து வளர்த்திருக்காங்க. அதோட பலனைத்தான் நான் இப்போ அனுபவிக்கிறேனோ என்னவோ?''

''ஓக்கே. அதிருக்கட்டும். நீங்க இந்தக் கோணத்திலே யோசிச்சுப் பார்த்திருக்கீங்களா? இழக்கக் கூடாததையெல்லாம் உங்க மனைவி இழந்திருக்காங்க. தன் நெருங்கிய உறவுகளை ஒவ்வொண்ணா பறிகொடுத்திருக்காங்க. நான் சொல்றது விளங்குதுன்னு நினைக்கிறேன்.''

''புரியுது டாக்டர். அதனாலே என்னையும் இழந்துடக்கூடாதேன்ற பயத்தில்தான் அவ இப்படி ஓவர் பொஸஸிவாக இருக்கான்னு சொல்ல வரீங்க இல்லையா?''

''எக்ஸாக்ட்லி.''

''அவளுடைய போக்கின் காரணத்தை நீங்க விளங்க வச்சிருக்கீங்க. ஆனால் அதுக்காக இதைக் காலமெல்லாம் சகிச்சுக்கிட்டிருக்க என்னாலே முடியாது டாக்டர். ஒண்ணு, அவகிட்டே வெளிப்படையாக் கோவிச்சுக்கிறேன். இல்லைன்னா அவளோட சிறுபிள்ளைத்தனத்தை சகித்துக் கொள்ளும்போது உள்ளுக்குள்ளேயே புகைகிறேன். உங்ககிட்டே, சொல்றதுக்கென்ன, இதனாலே எங்க தாம்பத்ய உறவு கூட சீர்கெட்டுக் கிடக்குது டாக்டர்.''

''இதையெல்லாம் என்னிக்காவது அவங்ககிட்டே மனசு விட்டுப் பேசியிருக்கீங்களா?''

''இல்லை. ஆனா ஒரு கணவனின் உணர்வுகளைப் புரிஞ்சுக்க ஒரு மனைவியாலே முடியாதா என்ன?''

''அதுதான் தப்பு. ஆயுள் முழுவதும் மற்றவரைப் பற்றிய தவறான கணிப்பிலேயே கழித்த தம்பதிகளை நான் பார்த்திருக்கிறேன். ஒருநாள் உங்க அலுவலகத்துக்கு விடுப்பு எடுத்துக்கிட்டு நிதானமாக உங்க மனைவிகிட்டே உங்க உணர்வுகளையும், எதிர்பார்ப்புகளையும் பக்குவமாக எடுத்துச் சொல்

லுங்களேன்."

"வாங்க குமார், எப்படி இருக்கீங்க?"

"நைஸ் டாக்டர். உங்க யோசனை பலனளிக்கத் தொடங்கிடுச்சு. சுதா என்னை இப்போ நச்சரிப்பதில்லை. ஆனால்...."

"ஆக அடுத்ததா ஏதோ சிக்கல்னு சொல்லுங்க. என்னடா இது, சிக்கல் தீர்ந்ததை வந்து மெனக்கெட்டு சொல்ற க்ளையண்ட் கூட இருக்காங்களேன்னு ஒரு நிமிடம் ஆச்சரியப்பட்டுட்டேன்."

"கிண்டல் செய்றீங்க, இருக்கட்டும். அதுக்காக என் புதுப் பிரச்னையைச் சொல்லாம இருந்திடுவேனா? சுதா இப்பவெல்லாம் அடிக்கடி டிஜெக்ட்டடாக இருக்கா. ரொம்ப முயற்சித்துதான் அவளை சமநிலைக்குக் கொண்டு முடியுது."

"குமார், தன் குழந்தைகளை வளர்த்து ஆளாக்கி, அவங்களுக்கு வேலை அல்லது கல்யாணம்னு முடிந்து வெளியூருக்குப் போய்ட்ட பிறகு, பெற்றோரின் மனத்தில் ஒரு வெறுமை வரும். இதை சைகாலஜியிலே 'எம்ப்டி நெஸ்ட் சின்ட்ரோம்'னு சொல்வோம். அதாவது திடீர்னு காலியாகி விட்ட கூடு. இந்த நிலையில் அவங்க கொஞ்சம் விசித்திரமாகத்தான் நடந்துக்குவாங்க."

"என்ன சொல்றீங்க? அதுமாதிரிதான் சுதாவின் மனநிலையும்னு குறிப்பிடறீங்களா? இவ எதை வளர்த்து ஆளாக்கிப் பிரிஞ்சுட்டா?"

"கொஞ்சம் யோசிச்சா அதை உங்களாலேயே உணர முடியும். தவிர உங்கள் மேலே இருக்கிற பாசத்தை எப்படி வெளிக்காட்டுவதன்றதிலே அவங்களுக்கு இப்போ சிக்கல் எழுந்திருக்கு. இதற்கு ஒரே தீர்வு, நீங்க உங்க பாசத்தை அவங்ககிட்டே வெளிப்படையாகக் காண்பிப்பதுதான். உங்க அன்பை வார்த்தைகளிலே கொட்டுங்க. வாரம் ஒருநாள் அவங்களுக்குப் பிடிச்ச பூங்காவுக்கு அழைச்சிட்டுப் போங்க. அவங்களுக்குப் பிடிச்ச டாம் அண்ட் ஜெர்ரி கேஸட்டை ஓட விட்டு, நீங்களும் கூட உட்கார்ந்து ரசியுங்க. அடுத்த ஊரிலே இருக்கும் அவ அண்ணன் வீட்டுக்கு அவளை மட்டும் அனுப்பாமல் நீங்களும் ஒருமுறை கூடப் போங்க. "இவ என் மனைவி"ன்றதை நாலு பேருக்கு நடுவிலே தயங்காமல் பெருமையாச் சொல்லுங்க. இப்படியெல்லாம் நடந்துக்கிட்டா சுதா... சாரி, உங்க மனைவி நார்மலாயிடுவாங்க."

"சுதான்னே நீங்க குறிப்பிடலாம் டாக்டர், தப்பில்லே. இப்போது அவ என் மனைவின்னாலும், ஒரு காலத்தில் உங்களுடைய மனைவியாகவும் இருந்தவதானே. சொல்லப் போனா அவளைப் பற்றிய ஆலோசனைகளை உங்களை விட வேறே யார் எனக்கு சரியாக எடுத்துச் சொல்லிடப் போறாங்க? அதனாலே தான் உங்ககிட்டே வந்தேன். ஆனா ஒரு சந்தேகம்."

"புரியுது குமார், அதை என்னாலே யூகிக்க முடியுது. இருந்தாலும் நீங்களே கேளுங்க."

"சுதாவோடு இனிமையான இல்லற வாழ்க்கை நடத்த எனக்குப் பல பயனுள்ள ஆலோசனைகளைக் கொடுத்தீங்க. ஆனா உங்களாலே ஏன் அவளோடு இணைந்து ஒற்றுமையாக வாழ முடியல்லே? ஏன் விவாகரத்து செய்தீங்க?"

"மூன்றாம் மனிதனாக, சைகியாட்ரிஸ்டாக இருக்கும் தெளிவு, கணவன்ற ஈகோவிலே கரைஞ்சு போயிடுச்சு மிஸ்டர் குமார்!" என்றார் இயல்பாக. ○



## பெரிய்ய்ய்ய்ய புடைவைக் கடை!

இங்கிலாந்தில் உள்ள வின்ட்சர் அரண்மனை போல் மிகப் பெரிய கட்டடமொன்றை பெங்களூரில் அமைத்து, அதற்கு 'கெம்ப் ஃபோர்ட்' என்று பெயரிட்டிருக்கிறார் ரவி பெல்வானி. 75,000 சதுர அடி பரப்பளவில் அமைந்துள்ள 'சாரி கெம்ப்'இந்தியாவிலேயே மிகப் பெரிய புடைவைக் கடை. ஆறு பெண் மாடல்கள் புடைவைகளை அணிந்து வந்து பார்வையாளர்களைக் கவர்கின்றனர். 300 ரூபாயிலிருந்து இரண்டு லட்சம் ரூபாய் வரை விலையுள்ள புடைவைகள் இங்கு குவிக்கப் பட்டிருக்கின்றன. பக்கத்திலேயே பொம்மைகள் பிரிவு ஒன்றும் இருப்பதால் பெங்களூர் வரும் டூரிஸ்ட்களுக்கு இனி இது ஒரு முக்கியமான இடமாக அமையும்.

அ. குமார்

## 7

தலையின் அடிப்புறத்தில் யாரோ பூப்பந்தால் ஒத்தடம் கொடுப்பது போலிருந்தது. கண் விழித்துப் பார்த்தான், ஹரி. சுழலும் மின் விசிறியின் நடுவில் இரவு விளக்கின் சிவப்புக் கீற்று. சுவர்க் கோழிகள் அடங்கிய நடுநிசி. ஹாலில் கேட்கும் அப்பாவின் குறட்டை. நடையில் படுத்திருந்த அம்மா எப்போது எழுந்து உள்ளே வந்தாள்? ஒரு சப்தமில்லாமல் அருகில் அமர்ந்து, காற்றை ஏந்துவது போல் தன் தலையை எடுத்து, மடியில் இருத்திக் கொண்டிருக்கிறாள். அதிர்வு தெரியாத ஆழ்ந்த உறக்கத்தை அம்மாவின் நூலிழை மூச்சுக் காற்று வருடிக் கலைத்துப் போனது.

அவன் கண் விழித்ததை அம்மா கவனித்திருக்கவில்லை. நல்லதாகப் போயிற்று. மறுபடியும் கண்ணை மூடிக் கொண்டான். வயதுகளும் சோகங்களும் உதிர்ந்து ஒரு குழந்தையாகி விட்டது போலிருந்தது. சுகத்தை ரசிக்கத் தெரிந்த குழந்தை.



ஆனால், எத்தனை நேரம் அம்மா இப்படியே உட்கார்ந்திருப்பாள்? வந்த மூன்று நாட்களாகத் தினமும் இப்படித்தான்.

"என்னம்மா இது? நீ படுத்துக்கோயேன்?"

"படுத்துக்காமல் என்ன? ஏதோ கொஞ்ச நேரம். நீ ஏன் பெரியவன் ஆனேன்னு இருக்குடா ஹரி. பைத்தியக்காரத்தனம்தான். உனக்கப்புறம் இன்னொண்ணு பிறந்திருந்தால் ஒருவேளை இப்படி இருக்காதோ என்னமோ?"

"எத்தனையோ தடவை சொல்லிட்டேன். மெட்ராஸ் வந்துடேன்? எதுக்கு ரெண்டு பேரும் தனியா இருக்கணும்?"

"ம்ஹூம். வேறு எதாவது பேசு."

அம்மா ஒரு புதிர்க் கிடங்கு. காரணங்களை எப்போதும் அவள் விளக்கிக் கொண்டிருக்கிறதில்லை. முடிவை மட்டும் உணர்ச்சிகளற்ற அறிக்கை தொனியில் அறிவித்து விடுவாள்.

தன்னுடன் வந்து தங்குவதில் என்ன சிக்கல் இருக்க முடியும் என்று அவன் யோசித்தான். ஸோ கால்ட் மாமியார் – மருமகள் மனஸ்தாபங்களைத் தவிர்க்கிற உத்தேசம்? பிறந்து, வளர்ந்த மண், காவிரி, காற்று என்று சென்டிமெண்ட் சமாசாரம்? மகனே என்றாலும் சினிமாக்காரன் ஆகிவிட்டதால் நேர்ந்த விலகல் தன்மை?

"நீ ஒண்ணும் பயப்பட வேண்டாம். சினிமா குணங்கள், பழக்கவழக்கங்கள் எதுவும் இன்னும் ஒட்டிக்கலை. அதுக்காக வராமல் இருக்காதே."

"சீச்சீ! உன்னை எனக்குத் தெரியாதா? மெட்ராஸெல்லாம் எங்களுக்கு ஒத்துக்காது. விடு. நீ அடிக்கடி வந்து போயிண்டிருந்தாலே போதும்."

இறுக்கங்கள் அற்ற சூழ்நிலையின் இதமான வருடல். மௌனத்தை அலங்கரிக்கும் மிருதுக் குரலில் அம்மாவின் சம்பாஷணை. வாழ்வின் பிரச்னைப் பகுதிகளை

மூட்டை கட்டித் தூர எறிந்துவிட்ட குஷி. எடுக்கலாமா விஷயத்தை?

அம்மா, எனக்கொரு பிரச்னை. இல்லை இரண்டு பிரச்னைகள். உனக்காவது எப்போதாவது மடியில் ஏந்திக் கொள்ள ஒரு பிள்ளை இருக்கிறேன். எனக்கு அதுவும் சாத்தியமில்லை என்று சொன்னால் தாங்குவாளா?

ஒருவேளை தாங்குவாளாயிருக்கும். ஆனால், உன் மருமகளுக்கு வேறொருவனுடன் தொடர்பு உண்டோ என்று சந்தேகப்படுகிறேன் என்றால்? தூளாகிப் போவாள் என்று தோன்றியது.

மடியில் கிடந்த வண்ணம், இருளில் அவள் முகத்தை ஊடுருவியபோது, அவனுக்கு மட்டுமேயான பிரத்யேக முறுவலைத் தோரணம் கட்டினாள் அம்மா.

உன் வருகை எனக்கொரு உற்சவம். உன் அண்மை எனக்கொரு போஷாக்கு. உன் சுகம் எனக்குப் பிரசாதம்.

வரிசை வரிசையாக அர்த்தம் சொல்கிற மாய முறுவல். கலைக்க விரும்பாமல் கண்ணை மூடிக் கொண்டான் ஹரி.

அதிகாலை கண் விழித்தபோது அம்மா அருகில் இல்லை. மாறாக, குளித்து முழுகி, வெளேரென்று அப்பாதான் காத்து இருந்தார்.

"மூணு நாளா நீ வாசல்படி தாண்டலை. உங்கம்மாவுக்குக் கொள்ளை சந்தோஷம், நீ அவளுக்காகவே வந்து இருக்கேன்னு. இன்னிக்கானா, கோவிலுக்குப் போயிட்டு வரலாம் இல்லையா?"

அவன், புன்னகையுடன் எழுந்து கொண்டான். அரைமணியில் வேலைகள் முடித்து, அப்பாவுடன் படி இறங்கியபோது உற்சாகமாக இருந்தது. சின்ன வயதில் அவர் கைப்பிடித்து நடத்திச் சென்றபோது, வலிந்து விடுவித்துக் கொண்டு பெரிய மனுஷ தோரணையுடன் நாலடி முன்னால் ஓடியது ஞாபகம் வந்தது. இப்போது ஆசையாக இருந்தது. தொளதொளத்த அரை டிராயரை இழுத்து இழுத்து விட்டுக் கொண்டபடிக்கு கையைப் பற்றிக் கொண்டு உலா வருதல் பற்றிய வேட்கை. திடீரென்று தான் மிகவும் சினிமாத்தனமாக யோசிக்கிறோமோ என்று நினைத்தான். மேஜிக் மிகுந்த சினிமா. ஆனால், வாழ்க்கையைக் காட்டிலும் சினிமா எத்தனை சுலபமாக இருக்கிறது! இருக்கிறதை இல்லாமல் ஆக்குவதும் அசாத்தியங்களைக் காலடியில் போட்டு நசுக்குவதுமான மேஜிக் எத்தனை மகிழ்வளிக்கக்கூடியது?

"அவனை ஏண்டா கூட்டி வரலை?" என்று அப்பா கேட்டார்.

"பெங்களூர் போயிருக்கான். ஒரு கண்காட்சி அங்கே."

அப்பா பதில் சொல்லவில்லை. மனைவி என்பவளை உடன் ஒட்டிக் கொண்ட நிழலாகவே எண்ணிப் பழகி விட்டவர். அவளுக்கொரு தனிமுகம், தனி ஜோலி, தனிச்சிந்தனை, செயல் என்பதெல்லாம் அவரது



கற்பனை எல்லைகளுக்குள் எட்டிப் பார்க்க முடியாதவை. ஒருவேளை இந்தத் தீர்மானக் கோடுகள்தாம் அவரது வாழ்வில் பிரமாதமான சிக்கல்கள் வந்துவிடாமல் பார்த்துக் கொள் கிறதோ என்று நினைத்தான்.

டிபிகல் மேல் ஷாவனிஸச் சிந்தனைகள். ரஞ்சனியிடம் சொன்னால், இப்படித்தான் ரப்பர் ஸ்டாம்ப் குத்துவாளாயிருக்கும். இடம் பெயர அம்மா மறுப்பதற்கு இது கூடக் காரண மாக இருக்கலாம்.

**ச**ந்நிதி. மல்லாண்ட திண் தோள் மணி வண்ணன், மல்லாந்து படுத்து இருந்தான். கற் பூரம். தீர்த்தம். துளசி. திரைப்படங்களில் வரும் நட்சத்திர சாஸ்திரிகள் பற்றி ஆர்வமாகக் கேட் கிற அர்ச்சகர். அவர் நிஜமான சாஸ்திரிகள் தானா? பதிலுக்குக் காத்திருக்கும் பாண் டியனின் சந்தேகம்.

வலம் வரும் மணல்வெளியில் புளியோ தரை சிதறாத இடமாகப் பார்த்து உட்கார்ந் ததும் அப்பா கேட்டார் : "சொல்லு. என்ன பிரச்னை உனக்கு?"

சடாரென்று நிமிர்ந்து பார்த்தான் ஹரி. ஒரு தேர்ந்த சினிமாக்காரனின் அபாரமான நடிப்பைக் கால் நகத்தால் நெக்கித் தள்ளிவிட்டு நிஜத்தைப் பிளக்கிற பார்வையில் ஒரு பி.வி. சர்க்கார் புன்னகை கலந்து இருந்தது.

சொல்லிவிடலாமா? அதற்காகத்தானே வந் திருக்கிறேன்? எல்லாவற்றையும் கொட்டி விட்டு, எதையாவது எடுத்துப் போகிற பண்டமாற்று பிஸினஸ். சுருக்கங்கள் விழுந்த முகத்தில் கவலையும் கனிவும் சேர்த்துப் பார்க்கிற அப்பா. கூடு தல் வயதில் துவண்ட தோள்களில் மேலும் சுமை ஏற்றுவது நியா யம் இல்லை என்று ஹரி நினைத் தான். ஆனாலும் ஒன்று மில்லை என்று சொன் னால், அவர் நம்பப் போவதில்லை. நன்மை பயக்க ஒரு பொய் தேவையாயிருக்கிறது. ஆகவே, "ஒண்ணுமில்லை. இந்தப் படம் ஒழுங்கா வரணுமேன்னுதான் கவலை. தெரிஞ் சிருக்கும். ஹீரோயின் ஓடிப் போயிட்டான்."

**ரஞ்சனி ஓடிப் போய்விடுவாளா?**

"சீ, இதுக்காக கவலை? பேசாமல் ஒண்ணு பண்ணு. ஹீரோயினே இல்லாமல் படம் எடு. புதுமையாகவும் இருக்கும். யாரும் ஓடிப் போயிடுவான்னு பயமும் இல்லை!"

ஒரு ஹீரோயினைத் தேடித் தந்தது நீதானே அப்பா என்று சொல்லத் துடித்த துடிப்பை அழுத்தி நகக்கிப் புன்னகை செய்தான்.

கல்லூரி நாட்களில் பெண்களைப் பற்றிய கனவே இல்லாமல் இருந்தது ஞாபகத்துக்கு வந் தது. முற்றிலும் அந்நியமான வேற்றுகிரகவாசி போல அவனைப் பார்த்த நண்பர்கள். எதுக்கும் நீ பழனி சித்த வைத்தியரைப் பார்த் துடறது உத்தமம் என்று அவ்வப்போது அளிக் கப்பட்ட கிண்டல் கலந்த உபதேச மொழிகள்.

திருவானைக்காவலில், நாதஸ்வர சாயபு குடியிருக்கிற தெருவில் வசிக்கிற ஒரு பெண், அப்போது அவனை மிகவும் விரும்புவதாக அவள் தோழிகள் மூலம் ஒலிபரப்பப்பட்ட தகவலைக் கொண்டுவந்து சேர்த்தான், உடன் படித்த பாஸ்கர்.

"என் காதல், சினிமா மேல் மட்டும்தான் பாஸ்கர். சொல்லிடு...."

சொன்னானா, தெரியாது. ஆனால் ஒவ் வொரு படம் வெளியானதும் பார்த்துவிட்டு, 'பெயர் சொல்ல விரும்பாதவள்' என்கிற அடிக் குறிப்புடன் திருவானைக்காவிலிருந்து நீண்ட பாராட்டுக் கடிதம் வரும். அவள்தானா என்று தெரியாது. அவளாகத்தான் இருக்க வேண்டும். பாஸ்கருக்கு அவள் வீடு தெரியும். அவனை அழைத்துக் கொண்டு திடீரென்று அவள் முன் போய் நிற்க வேண்டும் போல் இருந்தது.

நேற்று வரை இல்லாமல், சட்டென்று ஏன் இப்படி ஓர் எண்ணம் வரவேண்டும் என்று அவன் யோசித்தான். ரஞ்சனி மீதான தன் சந்தேகம், பரிணாம வளர்ச்சியில் பழிவாங் கும் குணமாக மாறுவதாகத் தோன்றியது. உனக்கொரு காதலன் என்றால் எனக் கொரு ரசிகை; முன்னாள் கைக்கிளைக் காதலி என்று பிரகடனப்படுத்தப் போகிறேனா?

எடுத்து வைக்கிற எந்த ஒரு அடியும் சரியானதாக இல்லை என்று உள்ளுக் குள் ஒரு குரல் கூவிக் கொண்டே இருந்தது. அவள் யாரென்றே தெரியாது. படிக்கிற வய தில் வாய்க்கிற கலபமான ஸ்லிப், காதல். காதல்தானா அது? இன்ஃபாசுவேஷன். ஏதோ ஒன்று. கூடுதல் அனுபவத்தில் இதிலிருந்தெல் லாம் மீண்டு இருக்கலாம். பெற்றோர் நிச்ச

"என்னங்க இது! ஜட்ஜ் நியூஸ் பேப்பரைப் பார்த்துத் தீர்ப்புச் சொல்றாரு!"

"அவர் சொல்ல வேண்டிய தீர்ப்பு நேத்தே பேப்பர்ல வந்துடுச்சாம்!"

– ஜெ. கண்ணன்



யித்து, பெரியோர் ஆசீர்வதிக்க யாராவது ஒரு பி.எச்.ஈ.எல்.காரனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு, திருவெறும்பூர் குவார்ட்டர்ஸ்களில் ஒன்றில் குடிபோயிருக்கலாம். இத்தனை வருடங்களில் ஓரிரு குழந்தைகள் கூட சாத்தியம். கல்யாணம் ஆனால் குழந்தை பிறக்கத் தானே வேண்டும்? பிறக்கத்தான் வேண்டும்.

**வீ**டு திரும்பி, சாப்பிட்டு, சட்டை மாட்டி பாஸ்கரைப் பார்க்கப் போன போது, "உனக்கு அதெல்லாம் இன்னும் ஞாபகம் இருக்கா என்ன?" என்றான் சாவகாசமாக.

"நேத்து வரைக்கும் இல்லைடா. என்னமோ சட்டுனு ஞாபகம் வந்தது. அவள் யாருன்னு கூடத் தெரிஞ்சுக்காமல் இருந்துட்டேன்."

"இப்ப தெரிஞ்சுக்கணும்னு ஆசையா இருக்கா?"

"உம். சின்ன க்யூரியாஸிட்டி. தட்ஸ் ஆல்."

"சினிமாக்காரன் க்யூரியாஸிட்டிக்குக் கேட்பானேன்?"

"சீ, அப்படியெல்லாம் இல்லைடா. ஊருக்கு வந்ததும் பழைய ஞாபகங்கள் வர்றது இல்லையா? ஜஸ்ட் லைக் தட்."

பாஸ்கர் அவனை உற்றுப் பார்த்தான்.

"உன் ஒய்ஃப்கிட்டே சொல்லியிருக்கையா?"

"எதை? நீ வேற. எனக்கே இப்பத்தான் ஞாபகமே வருதுன்னு சொன்னேன் இல்லையா?"

"சரி, வா" என்று எழுந்தான்.

**ஊ**ர் எல்லை ரயில்வே லைனை ஒட்டிய வீதி. குவிந்த மரங்களின் கவிந்த நிழல் வெளி. கிக்கிக் என்று சப்தமிடும் பறவை, கண்ணில் படவில்லை. சாயபு வீட்டிலிருந்து மெல்லிய இசை வந்து கொண்டிருந்தது. ஓயாத சாதகம்.

"அதோ பார். அந்த வீடுதான்" என்றான் பாஸ்கர்.

ஓட்டுச் சரிவில் கொடி படர்ந்து, பச்சை விரித்திருந்தது. புராதனத் திண்ணையும் வாசலில் உலர்த்திய மிளகாயும் சின்னக் கோலமுமாக ஜாமெட்ரி பாக்ஸ் அளவில் இருந்த வீடு.

பத்து நிமிஷம் காத்திருக்க, வெளியே வந்த பெண்ணைச் சுட்டிக் காட்டினான் பாஸ்கர்.

"அவள்தான். இப்போ, தென்றல் நகரில் ஒரு கான்வென்ட்டில் டீச்சராக இருக்காள். வேறு ஏதாவது?"

"புருஷன்?"

ஒருகணம் உற்றுப் பார்த்தவன், "கல்யாணம் பண்ணிக்கலைன்னு நினைக்கறேன்" என்றான்.

"காரணம்?" என்றான் அதிர்ந்து.

"யாருக்குத் தெரியும்? நீயாகவும் இருக்க

## "எங்கள் மனத்திலிருந்து மறைய மாட்டார்!"

**க**ல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

தனஞ்செயன் (எலக்ட்ரீஷியன்) வணக்கத்துடன் எழுதிக் கொண்டது. திரு. ஐயர் (சதாசிவம்) அவர்கள் காலமானதைக் கேட்டு நானும் எனது மனைவியும் மிக்க வருத்தமடைந்ததோடு இல்லாமல், நான் கல்கியில் எலக்ட்ரீசியனாக வேலை செய்தபோது நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைக்காமல் இருக்க முடியவில்லை.

ஒருநாள், மாடியில் உள்ள பேன், டியூப் லைட் இவைகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்தேன். அப்போது மேலே வந்த ஐயர் அவர்கள், "தனஞ்செயன் வேலைகளை முடித்து விட்டு மார்கபந்துவைப் போய்ப் பார்" என்று சொன்னார்கள்.



நானும் எனது வேலைகளை முடித்துக் கொண்டு சுமார் இரண்டு மணி நேரம் கழித்து, கேஷியர் மார்கபந்து அவர்களைப் போய்ப் பார்த்தேன்.

"என்ன எலக்ட்ரீஷியன், பெரிய ஐயர்கிட்ட என்ன கேட்டாய்?" என்றார்.

"நான் ஒண்ணும் கேட்கலை சார், ஐயர்தான் உங்களைப் பார்க்கச் சொன்னார்" என்றேன்.

"ஆமாமாம். நீ போட்டிருக்கும் கிழிந்த பனியனைப் பார்த்துத்தான் என்னைப் பார்க்கச் சொன்னார்," என்று சொல்லிக் கொண்டே, ஐம்பது ரூபாய் எடுத்துக் கொடுத்தார். அன்று நான் அணிந்திருந்த பனியன் மார்புக்கு மத்தியில் கிழிந்திருந்தது!

அப்போது, எனக்கு மாதச் சம்பளமே 65 ரூபாய்தான். இன்னும் எவ்வளவோ செய்தார். எத்தனையோ பேருக்குத் தர்மம் செய்து இருப்பார். இப்படிப்பட்ட ஐயர் அவர்கள் மறைந்தாலும், அவரால் பலனடைந்த மற்றவர்களின் மனத்தில் இருந்து மறைய மாட்டார்.

அம்மா அவர்களுக்கும் மற்றும் அவரைச் சேர்ந்த அனைவருக்கும் என் குடும்பம் சார்பாக ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

— வி. எஸ். தனஞ்செயன்,
சென்னை - 30.

*(இந்தக் கடிதத்தைப் போல் நூற்றுக்கணக்கானவை வந்தவண்ணம் இருக்கின்றன. எங்கள் இழப்பில் பங்கேற்று இரங்கல் செய்தி அனுப்பியுள்ள அனைவருக்கும் நன்றி. - ஆர்.)*

லாம்."

தூக்கிவாரிப் போட்டது அவனுக்கு. கடவுளே, எதற்காக இப்படித் தேவையில்லாத சிக்கல் வலைகளைப் பின்னிக் கொண்டே போகிறேன்? இவள் ஞாபகம் ஏன் வந்தது? வீணாக ஏன் வீடு தேடி வந்தேன்? விளையாட்டாகத்தான் சொல்கிறான் என்றாலும் ஏன் இத்தனை படபடப்பு ஏறுகிறது? வேண்டாம். புதிது புதிதாகப் பிரச்னைகளைப் பயிரிட்டு வளர்த்துக் குமைய வேண்டாம். இருக்கிற இறுக்கங்கள் போதும்.

"பாஸ்கர், வேண்டாம். திரும்பி விடலாம்" என்று அவசரமாகச் சொன்னான் ஹரி.

"பார்க்கணும்னு சொன்னே?"

"இப்ப வேணாம்னு தோணறது. எதுக்குப் பார்க்கணும்? ஒரு சம்பந்தமும் இல்லை. என்னவோ புத்திக் குளறுபடி. வந்துடு. போயிடலாம்."

**வீ**ட்டுக்கு வந்து, மாடிக்குச் சென்று, கதவைச் சாத்திக் கொண்டு படுத்தபோது எதற்கு இப்படித் தவித்துத் தவித்துத் தணிகிறோம் என்று குமைச்சலாக இருந்தது.

இலக்கில்லாத நடவடிக்கைகள். எதற்காக ஸ்ரீரங்கம் வந்தது? அம்மாவிடம் கஷ்டம் சொல்லி, ஆறுதலும், முடிந்தால் தீர்வும் வாங்கிச் செல்ல. ஆனால் ஒரு சொல் உதிர மாட்டேன் என்கிறது. உலைச் சோறு போல் தாளம் தப்பாமல் கொதிக்கிற மனம், அடங்குவேனா என்கிறது. எதையும் பேசிவிடத் தடுக்கிற தயக்கம் பூதாகரமாக நிற்கிறது. தப்பெல்லாம் உன்மேல்தான் என்று அம்மாவும் தன் மனத்தில் இருப்பதையே சொல்லி விட்டால் தாங்குவது கஷ்டம். தவறு – சரி, நியாய – அநியாயங்கள் முக்கியமில்லை. நிம்மதி. அதுதான் அவசரத் தேவையாக இருக்கிறது. அதற்கு முன்னால், தலை வெடித்து, சுக்குநூறாகச் சாபமிட்டிருக்கிற வேதாளம் எது என்று புரியாத அறியாமை உறுத்துகிறது. கடவுளே எதன்பொருட்டு என்னை இப்படி உருட்டி விளையாடுகிறாய்?

**க**தவு தட்டப்பட, எழுந்து போய்த் திறந்த போது அம்மா நின்று இருந்தாள்.

"தூங்கிட்டு இருக்கையா? நாலு நாள் ஆயிடுத்து இல்லையா? தூங்கலை போல் இருக்கு. உன்னைத் தேடி, ஆள் வந்தாச்சு!"

"யாரும்மா?" என்றான் கேள்விக் குழப்பத்துடன்.

"நான்தான்!" என்று கீழிருந்து வந்த குரலைக் கேட்டு அதிர்ந்தான்.

"உடனே நீ என் கூட வரணும். ரொம்ப அவசரம். விஷயம் சீரியஸ்" என்றான் ஸ்டீபன்.

(தொடரும்)

தேர்தல் வருவேன் என்று பயமுறுத்துகிற வேளையில் சில...

# புரட்சிகரமான பிரசார யோசனைகள்!





- சென்னை கொசுக்களைக் கொண்டு பிரசார இசைக் குழு அமைக்கலாம்! செலவு மிச்சம்!



- தெருவில் அலையும் மாடுகளின் மேல் போஸ்டர் ஒட்டி அணி திரட்டி வலம் வரச் செய்யலாம். மாடுகளே போஸ்டரைத் தின்றுவிடாமல் பார்த்துக் கொள்வது உங்கள் சாமர்த்தியம்.




- தொண்டர்கள் வீடு வீடாகச் சென்று தாய்மார்களுக்கு மெட்ரோ வாட்டர் பம்ப் அடித்துக் கொடுத்து வாக்குக் கேட்கலாம்.

கருத்து : ஜூஜூப்ஸ்
படம் : செல்லம்



- மெழுகுவர்த்திகளை உங்கள் நினைவுப் பரிசாக வழங்கினால் மின் வெட்டில் பயனாகும். மறக்காமல் உங்களுக்கு வோட்டுப் போடுவார்கள்.



• பேட்டை ரவுடிகள், பிளேடு பக்கிரிகள் பிக்பாக்கெட்காரர்களை வாக்காளர்களுக்கு முறையாக அறிமுகப்படுத்திப் பிரசாரம் செய்யலாம். இத்தனை பேர் தங்கள் பேட்டையில் வலம் வருகிறார்கள் எனத் தெரிந்தால் மக்கள் பின்னால் எது நடந்தாலும் அதிர்ச்சி அடையாமல் இருப்பார்கள்!



• சாக்கடை ஓடும் சந்துகளில் உங்கள் தேர்தல் அறிக்கைப் பிரதிகளை மிதக்க விட்டால் செலவின்றி எல்லா வாக்காளர் களுக்கும் போய்ச் சேரும்.



• லவுட் ஸ்பீக்கர் வைத்து அலற விட்டு, கெட்டபெயர் சம்பாதிப் பதைக் காட்டிலும் ஒரு மாஸ்டர் டேப்பில் பேசி, பிரதி எடுத்து வீடு வீடாக கேஸட் தரலாம். லேட் டஸ்ட் ஸ்டைல்! (பேச்சு பிடிக்காமல் அழித்து விட்டு, 'சோனியா சோனியா சொக்க வைக்கும் சோனியா' ரெக்கார்ட் செய்தாலும், உங்கள் ஞாபகம் மறக்காது.)



• தாய்மார்களை சென்டிமென்டாகக் கவருங்கள். 'வோட்டுப் போடும் அக்கா தங்கச்சி களே, தேர்தல் நாளன்று மாலை எனக்கு வோட்டுப் போட்டால் உங்களில் 10 பேரைக் குலுக்கி எடுத்து ஈஸ்வர வருடப் பச்சைப் புடவை பரிசு' என்று அறிவிக்கலாம்.



# அழகிப் போட்டியிலும் ஒரு சர்ச்சை!

இந்த ஆண்டு உலக அழகிப் போட்டியில், தேர்ந்தெடுக்கப்பட்ட அதிர்ஷ்டசாலி - இந்தியாவைச் சேர்ந்த டயானா ஹேடன்.

எண்பத்தாறு அழகிகளிலிருந்து ஐந்து பேரைக் கடைசி ரவுண்டுக்குத் தேர்ந்தெடுத்து, அதில் ஒரே ஓர் அழகியை உலக அழகி என்று பட்டம் சூட்டிப் பாராட்டியிருக்கிறார்கள்.

பரிசுத் தொகையான 95,000 டாலரில் பெரும் பகுதியைத் தமது குடும்பத்துக்குச் செலவழிக்கப் போவதாகச் சொல்லியிருக்கிறார் டயானா. உலக அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, மார்க் கோகஹன் என்ற ஐரிஷ் வியாபாரியுடன் நடக்கவிருந்த தமது திருமணத்தைத் தள்ளிப் போட்டுவிட்டார்!

டயானாவின் அப்பா ஆப்ரி ஹேடன், ஹைதராபாதிலுள்ள மோட்டுகுடாவில், புனித அந்தோணியார் சர்ச்சில் டெலிபோன் பூத் வைத்திருக்கிறார். "200 ரூபாய் சம்பளத்தில் என் குடும்பத்தைக் காப்பாற்றக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். என் மனைவி என்னை விட்டுப் பிரிந்து டயானாவுடனும், அவள் தம்பி ஷேன் உடனும் பம்பாயில் ஆறு வருடங்களாக வசித்து வருகிறார்கள். இருந்தாலும் அவள் உலக அழகிப் பட்டம் பெற்றதில் எனக்கு ஏக மகிழ்ச்சி. டயானா புத்திசாலி. நிறையப் படிப்பாள்!" என்று சொல்லியிருக்கிறார்.

டயானா பிறந்தது எர்ரகுடா இ.எஸ்.ஐ. மருத்துவமனையில். பிறந்த தேதி : மே மாதம் முதல் தேதி. ஆங்கிலோ - இந்திய வகுப்பைச் சேர்ந்தவர் டயானா.

உலக அழகிப் போட்டியில் முதலாவதாக டயானா வந்தாலும், ஒரு பெரிய சர்ச்சை இப்போது கிளம்பியிருக்கிறது. காரணம், ஒன்பது நீதிபதிகளில் ஒருவரான கேதன் சோமையா நடத்தும் பம்பாய் நிறுவனம் ஒன்றில்தான் டயானா வேலை பார்க்கிறார். பாரபட்சமாகச் செயல்பட்டு, தம்மிடம் வேலை செய்கிறவரையே தேர்ந்தெடுத்து விட்டார் என்பதுதான் குற்றச்சாட்டு. ஆனால், "ஒன்பது பேரில் ஒரே ஒருவரின் அபிப்ராயத்துக்கு மட்டும் மதிப்பளித்து இந்தத் தேர்வு நடந்து விட முடியாது!" என்று டயானா சூடாகப் பதில் சொல்லியிருக்கிறார்.

இந்த அழகிப் போட்டியை ஸீஷெல்ஸ் அரசின் அதிகாரபூர்வ அமைப்பான டேலண்ட் ப்ரமோஷன் என்ற நிறுவனம் நடத்துகிறது. இந்த நிகழ்ச்சி, ஸீஷெல்ஸ் நகரத்தை டூரிஸ வளர்ச்சி நோக்கில் பிரபலப்படுத்தவே நடைபெறுவதாக அந்நாட்டின் அதிபர் ஆல்பர்ட் ரீனே அறிவித்தார். உலக அழகிப் போட்டியை முன் வரிசையில் உட்கார்ந்து கொண்டு ரசித்த அவர், முடிவு அறிவித்த உடனே எழுந்து போய் விட்டார். அதற்குப் பின் நடந்த விருந்து - கேளிக்கைகளிலும் கலந்து கொள்ளவில்லை!

— சித்தார்த்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

# ஆரோக்கியமான கேசத்திற்கு இயற்கையான மருத்துவ முறை






50 ml.




100 ml.

**krithika**™

**HAIR VITALIZER**

*7 times Concentrated with Natural Colour.*

அரிய மூலிகைகளில் இருந்து
தயாரிக்கப்பட்டது. கேசத்தைப்
பொடுகிலிருந்தும் முடி
உதிர்வதிலிருந்தும் பாதுகாத்து,
உலர்ந்த கேசங்களை
உயிர்ப்பிக்கின்றது கிருத்திகா.

Herbal (Siddha) Hair Vitalizer

Free set of 5 Combs with 100 ml Pack



mothi Pharma Pvt. Ltd.

No. 703, Poonamallee High Road, Aminjikarai, Chennai - 29. (Tamilnadu)
Ph: 6445448, Fax: 044-614780

## கேர்லெஸாய் இருந்தால் ஹேர்லெஸ் ஆகும்.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/ 97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

# சந்தோஷம்



எங்களை வழி நடத்திச் செல்லும் மாமனிதர்,
திருப்பணிச் செல்வர், மணி விழா நாயகன்
**டாக்டர் பி. பாலசுப்பிரமணியம்** அவர்கள்
பவழ, முத்து விழாவும் கண்டு பல்லாண்டுகள்
வாழ வாழ்த்துகிறோம்.

*வற்றாத ஜீவநதி போல நாளும்*
*வழங்குநிதி நிறுவனங்கள் வளரச் செய்தே*
*பற்றற்றான் பரமன்திரு வருளைப் போற்றிப்*
*பரவுதிருப் பணியினிலே பற்று வைத்தே*
*நற்றவங்கள் ஆற்று கல்விச் செயலாண் மையால்*
*நீள் கல்விக் கொடைவளர்க்கும் எங்கள் தலைவ!*
*கொற்றவரே! பாலசுப்ர மணிய செல்வ!*
*கோதில்மணி விழாக் கண்டீர்! வாழ்க! நன்றே!*

மனங்குளிர வாழ்த்தும்
அன்புள்ளங்கள்

THENI. **S. RAJA GOPAL.**
**ANANJI POST - THENI**

**S.V. Muthukumaraswamy,**
**B.Sc., B.G.L.**
**Director,**
**Om Saravana Bhava Benefit Fund Ltd**
**Venu Gopal Building,**
**No. 26, Evening Bazaar, Madras - 3**